



# ஹிபாஜத்துல் இஸ்லாம்

நிச்சயமாக நாம் அ(ந்த இஸ்லாம் மதத்)தைக் காப்பாற்றுவோம். [குர்ஆன்

ஆசிரியர்:—மௌலவீ A. R. அப்துர்றஹீம் ஸாஹிப் (பாக்கவி)



| மலர் 6 | ஹிஜ்ரி 1354 ஷஅபான் மீ<br>1935 ளு நவம்பர் மீ | இதழ் 11 |
|---|---|---|





## அல் குர்ஆன்

"எவர் என்னுடைய ஞாபகத்தைப் புரக்கணித்தாரோ அவருக்கு நிச்சயமாக கஷ்ட ஜீவனம் உண்டாகும்." (அல்குர்ஆன்)

சோதரீர்! மேலே கூறப்பட்டுள்ள தெய்வத்திருமறையின் திவ்விய வசனத்திலிருந்து, அல்லாஹுதஆலாவின் ஞாபகத்தை மறப்பவர் தரித்திரத்தாலும் வறுமையாலும் பீடிக்கப்படுவார் என்று தெரியவருகிறது. இதனைக்கேட்கும் முஸ்லிம்களுக்கும் மற்றவர்களுக்கும் இஸ்லாத்தைப்பற்றிப் பொதுவாக ஒரு ஆக்ஷேபனையுண்டாகக்கூடும். அதாவது, முஸ்லிம்களாகிய நாம் உலகத்திலுள்ள இதர மதஸ்தர்களைப்பார்க்கினும் அல்லாஹுதஆலாவை அதிகமாக வணங்குகிறோம்; தினசரி 5 வேளை தொழுகிறோம்; பிரதி வெள்ளிக்கிழமை தோறும் ஜும்ஆத் தொழுகையை நிறைவேற்றுகிறோம்; தொழுகை முடிந்தவுடனும், குத்பா ஓதும்போதும் அல்லாஹு சுப்ஹானஹுவதஆலாவைப் பிரார்த்திக்கிறோம்; ஆனால், உலகிலுள்ள ஜனங்களில் தரித்திரத்தால் கஷ்டமடைவோர், முஸ்லிம்களாகி நம்மைத் தவிர வேறு ஒருவருமில்லை, பிறமதத்தாரோ தொழிலிலும், செல்வத்திலும், செல்வாக்கிலும் அதிகாரத்திலும் முஸ்லிம்களாகிய நம்மைப் பார்க்கிலும் மிகைத்திருக்கின்றனர்; அவர்களுக்குக்கீழ்ப்பட்டு, அவர்களின் உதவியின் பேரில்தான் நாம் தொழில் முறைசெய்து நமது ஜீவனத்தைத் தேடிக்கொள்ளவேண்டியதாக இருக்கிறது. இந்த நிலைமையானது திருகுர்ஆனில் சொல்லப்பட்ட ஆயத்தின் கருத்துக்கு நேர் முரணாக இருக்கிறது. உலகத்தில் ஐசுவரியவானாகவும், நல்ல வாழ்க்கையுள்ளவனாகவும் இருக்கவேண்டியது மேற்கண்ட ஆயத்தின் கருத்துப்படி முஸ்லிம்களாகவே இருக்கவேண்டும், அல்லது தற்போது நாம் அவனைப் பிரார்த்திப்பதும் தொழுவதும் அவனை ஞாபகம் செய்வனவாயிருக்க முடியாததாக இருக்கவேண்டும் என்ற ஐயம் முஸ்லிம்களுக்கு உண்டாகும். இதர மதஸ்தர்களும் இந்த ஆயத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு முஸ்லிம்களது தொழுகை, நோன்பு, பிரார்த்

தலை முதலியவைகளைச் சரியானவைகளல்லவென ஆக்ஷேபனை செய்ய இடமுண்டு.

அல்லாஹுதஆலாவின் ஞாபகம் என்பதற்குப் பிறமதத்தாரும் நம்மவரிற் சிலரும் கொண்டுள்ள தார்ப்பரியம் சரியானதன்று. தொழுகை, ஜும்ஆ, துஆ ஆகியவைகள் அல்லாஹுதஆலாவின் ஞாபகம் என்பதிலும், அவனது ஞாபகத்தை உண்டாக்கக்கூடியவைகளென்பதிலும் சந்தேகமில்லை. ஆனாலும், இந்த இடத்தில் அதாவது மேற்கண்ட ஆயத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் அல்லாஹுதஆலாவின் ஞாபகம் என்பதற்கு இந்தத் தொழுகையும், ஜும்ஆவும், துஆவும் கருத்தல்ல, இவைகளைச் செய்வதினுலேற்படும் பலனே கருத்தாகும். அதாவது, அல்லாஹுதஆலாவின் கட்டளைகளில் எந்தக் கட்டளையையும் மீறி நடக்கக்கூடாது என்ற உணர்ச்சியுண்டாகி அவ்வாறு மீறி நடக்காமலிருக்கும் தன்மையுண்டாகவேண்டும். "நிச்சயமாகத் தொழுகையானது மானக்கேடானவைகளையும் வெறுக்கத்தக்கதையும், அக்கிரமத்தையும் விலக்கும்" என்று இறைவன் கூறியிருப்பதும் இதே கருத்தாகும். ஏனெனில், தொழுகையை நிறைவேற்றுவதால் தன்மீதேற்றப்பட்டுள்ள கடமைகளை நிறைவேற்றிக்கொண்டு மறு உலகில் புண்ணியத்தை யடைவதும் இவ்வுலகில் அதன் பலனாகிய மானக்கேடான காரியங்கள், வெறுக்கத்தக்க காரியங்கள், அக்கிரமம் முதலிய சகல தீய காரியங்களை விட்டு விடுவதும் கருத்தாகும். இப்படிப்பட்ட தன்மை தொழுகையாளிக்கு ஏற்படுமாயின் அவர் தொழுகையை அதற்குரிய சகல அம்சங்களுடன் நிறைவேற்றிவிட்டார் என்றே மற்றவர்கள் கருதுவர். ஆதலின், இந்த இடத்தில் அல்லாஹ்வின் ஞாபகம் என்பதற்கு அல்லாஹுதஆலாவின் சகல கட்டளைகளையும் நிறைவேற்றுவதுடன் அவன் விலக்கிய சகல காரியங்களையும் விட்டு விடுதல் என்பதே கருத்தாகும். இக் கருத்தைக் கவனத்தில் வைத்துப் பார்ப்பின் நமது முஸ்லிம்களின் நிலைமை நன்கு புலனாகும்.

### சோம்பலும் தகாதகாரியங்களைச் செய்தலும்.

ஒரு சமூகத்தின் செல்வ நிலைமை வீழ்ச்சியடைவதற்கு முதற்காரணம் அச் சமூகத்தில் சோம்பல் உண்டாகுவதேயாகும். இதனைப் பற்றியே இறைவன் நமது நபிகள் கோன் (ஸல்.) அவர்களை நோக்கி "(நபியே) தங்களுடைய மார்க்கத்தை விளையாட்டாகவும் வீணானவையாகவும் ஏற்படுத்தி இருப்பவர்களைவிட்டு விடும். மேலும், அவர்களை (அற்ப) உலக ஜீவியம் ஏமாற்றிவிட்டது" என்று கூறி இருக்கிறான். இன்று முஸ்லிம் சமூகத்தின் பெரும்பாகம் வேலையில்லாமல் கையைக் கட்டிக்கொண்டிருத்தல், வீண்விளையாட்டில் பராக்காயிருத்தல் முதலியவைகளிலேயே கழிந்து கொண்டிருக்கிறது. இவ்வாறான வீண் வேலைகளிலும் காரியங்களிலும் மூழ்கி இருப்பதே தங்கள் வாழ்நாளின் முக்கிய திட்டம் என்று அவர்கள் நம்பி இருக்கிறார்கள் போலும். இஸ்லாம் மதத்தை அழிப்பதற்கும் அதனை ஒழிப்பதற்கும் இஸ்லாத்தின் பரம விரோதிகள் காரணமாக இருப்பதுடன் இஸ்லாம் மதத்தைத்தழுவி இருப்பவர்களில் மேற்கூறப்பட்ட வீணான வேடிக்கைகள், ஆடல் பாடல்களில் ஈடுபட்டிருப்பவர்களும் பொறுப்பாளிகளாக இருக்கிறார்கள் என்பதை நம்மவர் நன்கு உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். ஏனெனில், தொழில்முறைகள் செய்யாமல் பிறர் மெய்வருந்திச் செய்யும் தொழிலிலிருந்து கிடைக்கும் வருவாயிலிருந்து உண்ணவும் உடுத்தவும் செய்பவர் பிறருடைய ரத்தத்தை உறிஞ்சுபவருக்கே ஒப்பாக இருக்கிறார்கள். தன் சமூகத்திலுள்ள மற்றவர்களின் ரத்தத்தை இவ்வண்ணம் உறிஞ்சுவது தனது சமூகத்திற்கு துரோகம் செய்வதாகும்.

### வீண் செலவு

இஸ்லாம் மதம் பலகாரியங்களைச் செய்ய வேண்டாம் என்று விலக்கி இருக்கிறது. அப்படி விலக்கி இருக்கிற காரியங்களில் வீண் செலவு, ஊதாரியான செலவு, ஆடம்பர அடாச் செலவு ஆகியவைகளுமாகும். இவைகளை இஸ்லாம் மதம் விலக்கி இருப்பதுமல்லாமல் இதனைப்பற்றித் திருகுர்ஆனின் பல இடங்களிலும் மடக்கி மடக்கிக் கூறப்பட்டிருக்கிறது. "ஊதாரியான செலவுக்காரர்கள் ஷைத்தான்களின் சகோதரர்கள்", "வீண் செலவுக்காரர்களை அல்லாஹ் நேசிக்கமாட்டான்" என்றெல்லாம் பலவாறு கண்டித்துக் கூறி இருக்கிறது.

இப்படிக் கண்டன உரைகள் திருகுர்ஆனின் பல இடங்களிலும் விபரிக்கப்பட்டிருந்தும் நமது முஸ்லிம் சகோதரர்களில் பாமரர் மட்டுமென்ன மார்க்கபக்தியும், செல்வாக்கும், படிப்பும், அறிவும் உள்ளவர்களும்கூட இவ்வீணான செலவுகளுக்கு இரையாகியே இருக்கிறார்கள். இப்படிப்பட்ட வீணான செலவுகளைவிட்டு நீங்கும்வரை அவர்கள் சரியான மார்க்க பக்தர்களாகவும், அறிவாளிகளாகவும், படிப்பாளிகளாகவும் இருக்கமுடியாது என்பதை இச்சகோதரர்கள் அறிந்துகொள்ளட்டும். உலகத்திலுள்ள மனிதரில் எவரும் ஷைத்தானுக்குச் சகோதரராக இருந்து கொண்டு அல்லாஹுதஆலாவின் நல்லடியாராக இருக்கவே முடியாது. இவ்வாறான வீண் செலவுகளுக்கு முக்கிய காரணம் தன் நிலைமையை யுணராமை, பின் விளையும் பயனை உத்தேசிக்காமை, துவேஷம், பொறாமை, வழக்காடுதல், பிரபல்யமடைவதில் பிரேமை, சிற்றின்பம், தன்னைப் பெரிதாக மற்றவர்கள் நினைக்க வேண்டுமென்ற எண்ணம் ஆகியவைகளேயாகும். "நீங்கள் சந்தோஷம் கொள்ளாதீர்கள், நிச்சயமாக அல்லாஹ் சந்தோஷம் கொள்பவர்களைப் பிரியப்படுவதில்லை".

"நீங்கள் பூமியில் அகம்பாவமாக நடக்காதீர்கள், நிச்சயமாக அவன் அகம்பாவம் கொள்பவர்களையும் சந்தோஷங் கொள்பவர்களையும் நேசிப்பதில்லை" என்று இறைவன் கூறி இருக்கிறான்.

### உலோபித்தனம்

திருகுர்ஆன் வீணான செலவுகளையும் ஊதாரியான காரியங்களையும் வெறுத்துத்தள்ளுவதுபோல உலுத்தத்தனம் செய்தல், உலோபித்தனம் செய்தல் ஆகியவைகளையும் விலக்கி இருக்கிறது. வீணான செலவுக்காரன் தனது செல்வத்தைத் தக்கவாறு செலவு செய்யாமல் விரையம் செய்து தனது சமூகத்திற்கு நாச காரியத்தைச் செய்து கொள்வதுபோல் உலோபியானவன் அவசியமாகச் செலவு செய்ய வேண்டிய காரியங்களிலும் கூடப் பணத்தைச் செலவு செய்யாமல்—தனது சமூகத்திற்குச் செய்யவேண்டிய நலன்களைச் செய்யாமல் அதன் அழிவிற்கான காரியங்களுக்கு மறைமுகமாக ஆதரவளித்து விடுகின்றான். இவ்விரு வகை கூட்டத்தினரும் நமது சமூகத்திற்குப் பெரும் தீங்கு செய்பவர்களாக இருக்கின்றார்கள். வீணான செலவுக்காரர்கள் தங்களது கைப்பொருள்களைச் செலவு செய்துவிட்டுக் கஷ்டத்திலாழ்ந்து தங்களது சமூகத்தைச் சேர்ந்த மற்றவர்களுக்கும் கஷ்டத்தைக் கொடுத்து விடுகிறார்கள். உலோபிகளாகவுள்ளவர்கள் காரூனைப்போல் அளவிற்கதிகமாகப் பணத்தை சேர்த்து வைத்துத் தங்களது சொந்த உபயோகத்திற்கூட தக்கவாறு அதனை உபயோகித்துக்கொள்ளாமலும், தன் சமூகத்தைச்சேர்ந்த மற்றவருக்குத்தொழில்முறைகள் செய்யப் பணம் கொடுத்து உதவாமலும் இருப்பதால் ஏழைகளாகவுள்ளவர்கள் பிறமதத்தாரிடம் வட்டிக்குக் கடன் வாங்கவேண்டிய நிலைமைக்கு வந்து விடுகிறார்கள். இதனால் முஸ்லிம் ஏழைமக்கள் தங்கள் வருவாயைப் பிறசமூகத்தாரிடம் வட்டியாகக்கொடுத்து அழிந்து போகிறார்கள். இப்படிப்பட்ட உலுத்தர்களைப் பற்றித் திருக்குர்ஆனில் "சீக்கிரத்தில் அவர்கள் தங்களுடைய உலுத்ததனத்தைக் கழுத்தில் வளையமாகப் போடப்படுவோர்கள். மேலும், அவர்களுடைய நெற்றி அதனைக்கொண்டு சூடு போடப்படும்" என்று கூறிஇருக்கிறான். திருகுர்ஆனில் இதனைப் பார்க்கினும் கடுமையான கண்டனம் வேறு ஒன்று இருக்கவேண்டுமா? என்பதையும், முஸ்லிம்களாகிய நாம் திருகுர்ஆன் கட்டளையைச் சரிவரப் பின்பற்றி நடக்கிறோமா என்பதையும் கவனித்துப் பார்ப்போமாக.

### வட்டிக்கு வாங்கல், வட்டி கொடுத்தல்.

உலுத்தத்தனம் செய்தல் மனித வர்க்கத்திற்குப் பெரும் சாபக்கேடாகவும் கேவலமான தன்மையாகவும் இருப்பதுபோல வட்டிக்குப் பணம் கொடுத்து, அவ்வட்டியை வாங்கிப் புசிப்பதும் ஒருபெரும் அநீதியும் சாபக்கேடுமாகும். வட்டி வாங்கிப் புசிப்பதால் மனிதனுடைய இருதயம் இரக்கமற்ற தன்மையதாகிவிடுகின்றது. ஆகவே, அப்படிப்பட்டவர்கள் மனிதனுடைய அந்தஸ்திலிருந்து வீழ்ச்சியடைந்து ஷைத்தான்கள், காட்டுமிராண்டிகளின் இனத்தில் வந்துவிடுகிறார்கள். இப்படி வட்டிக்குப் பணம் கொடுப்பவர்களை இறைவன் "அல்லாஹ்வுடனும், அவனது றஸூலுடனும் யுத்தம் செய்வதற்கு வாருங்கள்" என்பதாகத் தனது திருமறையின் மூலம் அழைக்கிறான். எனவே, திருகுர்ஆனது கட்டளைப்படி, வட்டிக்குப் பணம் கொடுப்பவர்கள் அல்லாஹுதஆலாவுடனும் அவனது றஸூல் (ஸல்.) அவர்களுடனும் யுத்தம் செய்பவர்களாகிவிடுகிறார்கள் என்று தெரியவருகிறது. போர்க்களத்தில் பகைவர்களுக்கு ஆயுதங்கொடுத்து உதவுபவர்களும்

பகைவர்களாகவே கருதப்படுவார்களாதலின் அல்லாஹுதஆலாவினிடம் யுத்தம் செய்பவர்களாகிய வட்டிக்குப் பணம் கொடுக்கும் தனவந்தர்களிடம் வட்டிக்குக் கடன்வாங்கும் ஏழை எளியார்களும் அல்லாஹுதஆலாவின் பகைவர்களேயாவார்கள். ஆதலின், வட்டிக்குப் பணம் கொடுக்கும் முஸ்லிம்களும் வட்டிக்கு பணம் வாங்கும் முஸ்லிம்களும் சரி அவர்கள் வட்டித்தொழிலை வைத்துக்கொண்டு சமூக முன்னேற்றத்திற்கு எத்தனை திட்டங்களை ஏற்படுத்தியபோதிலும் அத்திட்டங்களால் ஒருபோது வெற்றியடையப் போவதில்லை என்பது திண்ணம்.

### வியாபாரம் செய்யுங்கள்.

இஸ்லாத்தின் நிர்மாணத் திட்டத்தில், நியாயமான முறையில் பணம் சம்பாதிப்பதற்கான தொழில் புரிவதும் ஒன்றாகும். இதில் முதன்மையானது வியாபாரம், மற்றொன்று தேசசஞ்சாரம். தேசசஞ்சாரம் செய்து நியாயமான முறையில் பணம் சம்பாதிக்கும்படி இஸ்லாம் வற்புறுத்தித் தாக்கீது செய்திருப்பது போல் உலகத்திலுள்ள வேறெந்த வேதமும் அவ்வளவு பலமாக தாக்கீது செய்யவில்லை என்று கூறலாம். "பூமியில் சஞ்சாரம் செய்யுங்கள்", "நீங்கள் தொழுகையை நிறைவேற்றி விட்டால், பூமியில் நீங்கள் பரவிவிடுங்கள்" "அல்லாஹ்வின் கிருபையை நீங்கள் தேடுங்கள்" என்றெல்லாம் இறைவன் கட்டளையிட்டிருக்கிறான்.

முற்காலத்தில் இந்தியாவில் குடியேறிய முஸ்லிம்களது வாழ்க்கையில் பெரும்பாலானவை இஸ்லாத்திற்காக யுத்தம் செய்வதும், இந்தியாவை ஆட்சிபுரிவதுமாகவே இருந்திருக்கிறது. அப்பெரியார்கள் இந்தியாவைக் கைப்பற்றியபின் வியாபாரம் வர்த்தகம் முதலிய துறைகளில் அவர்களது பின்னைய சந்ததியினராகிய நாம் ஈடுபடாது நமது முன்னோர்களின் தொழிலாகிய போர்வீரத் தன்மையையே விரும்புபவர்களாகவும் மதிப்பவர்களாகவுமிருந்து இறைவன் கூறிய இக்கட்டளையைப் புரக்கணித்துவிட்டோம். இதன் பயனாக நம்மிடமிருந்த அரசியலதிகாரம் நம்மை விட்டுப் பிறர் கை சென்றபின் நமது கண்ணியத்தைக் காக்க வழியில்லாமல் நாளுக்குநாள் க்ஷீணதசையடைந்துகொண்டே இருக்கிறோம். வியாபாரம், கைத்தொழில் முதலியவைகள் அந்நியர்கள் கைவசம் சென்று விட்டதால் இப்பொழுது நாம் பிறரது கையை எதிர்பார்க்க வேண்டியவர்களாகிவிட்டோம். எனவே, நாம் நமக்குள்ளாக ஒரு திட்டத்தை ஏற்படுத்தி அதன்படி நடக்க முன் வரல் வேண்டும். நம்மைச் சேர்ந்த மற்றவர்களையும் அவ்வாறு செய்யும்படி தூண்டுதல் வேண்டும்.

1. வேலை செய்வதும், கஷ்டமான தொழில் செய்வதும் வணக்கமான காரியங்களாகும் என்னும் உணர்ச்சி முஸ்லிம்களுக்குள் உண்டாக வேண்டும். எந்த வேலையையும், எந்தத் தொழிலையும் கேவலமானதாக நினைக்கக்கூடாது. ஆனால், அந்தத் தொழில் அல்லாஹுதஆலாவினது கட்டளைக்கும் அவனது றஸூல் (ஸல்.) அவர்களது கட்டளைக்கும் விரோதமானதாக இருக்கக் கூடாது.

2. வேலையில்லாமலிருக்கிற தங்களது சகோதரர்களுக்கு வேலையுண்டுபண்ணிக் கொடுக்கும் விஷயத்தில் எல்லா முஸ்லிம்களும் ஒருவருக்கொருவர் உதவியாக இருக்க வேண்டும்.

3. வீண் செலவு, ஊதாரியானசெலவு, உலுத்தத்தனம், வட்டிக்குப் பணம் கொடுத்தல், வட்டிக்குப் பணம் வாங்குதல் ஆகிய விஷயங்களை ஒருமுகமாக உதறித்தள்ளவேண்டும்.

4. ஒவ்வொரு முஸ்லிமும் தனது வருவாயில் நாலொருபங்கை மாதந்தோறும் மீதம் பண்ணி வைக்கவேண்டிய அவசியத்தை உணர்ந்து அதன்படி செய்யவேண்டும்.

5. முஸ்லிம்களை வியாபாரத் துறையில் ஈடுபடுத்தவேண்டும். ஒவ்வொரு முஸ்லிமும் தங்களுக்கு வேண்டியதை முஸ்லிம்களிடமே விலைக்கு வாங்கிக்கொள்ளவேண்டும் என்று வாக்குறுதி செய்யவேண்டும். அதன்படி யாவரும் நடப்பதற்காக வேண்டிய பிரசாரங்களைச் செய்யவேண்டும்.

6. முஸ்லிம்களைக் கடனாளியாக்குவதான வீணான சடங்குகளையும் ஆசாரங்களையும் விட்டொழிக்க வேண்டும். ஒருவருக்கொருவர் வழக்குத் தொடரல், ஆடம்பரமான விருந்துகள் செய்தல் முதலியவைகளைவிட்டு விட வேண்டும்.

இத்திட்டப்படி முஸ்லிம்கள் நடக்க முன்வருவார்களாயின் இன்ஷா அல்லாஹ் கூடிய சீக்கிரம் முஸ்லிம் சமூகம் முன்னேற்றத்திற்கு வரக் கூடியவழியை அடைந்து விடும் என்பதிற் சந்தேகமில்லை.

## அல் ஹதீது

எவருடைய நாவையும் கையையும் விட்டுமுஸ்லிம்கள் ஈடேற்றம் பெற்றிருக்கிறார்களோ அவர் தான் (உண்மை) முஸ்லிமாவார். இன்னும் அல்லாஹுதஆலா விலக்கியதை வெறுத்தவர் (ஹிஜ்றத்துச் செய்தவர்) எவரோ, அவர் தான் (உண்மை) முஹாஜிர் (வெறுத்தவர்) ஆவர்.—(புகாரி)

இந்த ஹதீதில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இஸ்லாத்தினுடையவும் ஹிஜ்றத்தினுடையவும் கருத்தை—ஆத்மார்த்த அகமியத்தை—வெளிப்படுத்தி, உண்மையாக இஸ்லாம் மதத்தை ஒருவர் பின்பற்றி ஒழுகுகிறார் என்பதை அறிவதற்கு இந்த ஹதீதில் சொல்லப்பட்ட விஷயங்களைத் துலாக்கோலாக ஆக்கி இருக்கிறார்கள். முஸ்லிம் என்று தன்னைச் சொல்லிக் கொள்பவர் ஏனைய முஸ்லிம்களுக்கு விரோதமாக, தீங்காக எதையும் சொல்லக்கூடாது, பொய்யுரைக்கக் கூடாது, தூஷணை செய்யக்கூடாது, புறம்பேசலாகாது, மனத்தை வருத்தக்கூடிய விஷயங்களைக் கூறலாகாது, பொய் குற்றம் சுமத்தலாகாது, அவமரியாதை செய்யலாகாது, பொய்சாக்ஷியம் கூறலாகாது, இவ்விதமாக நாவின் மூலம் இதர முஸ்லிம்களுக்குத் தன்னால் எவ்விதத் தீங்கும் விளையாமல் தனது நாவைக்காத்துக் கொள்ளவேண்டும் என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கூறி இருக்கிறார்கள். நாவுக்குப் பிறகு கையையும் காத்துக்கொள்ள வேண்டும். எவ்வாறெனில், ஒரு முஸ்லிம் தனது சகோதர முஸ்லிமை காரணமில்லாமல் அடித்தல், அநியாயமாகக் கொலை புரிதல், தொந்தரை செய்தல், பிறருடைய சொத்துக்களில் அக்கிரமமாகப் பிரவேசித்தல் முதலிய காரியங்களைச் செய்யலாகாதென்றும் கட்டளை யிட்டுள்ளார்கள். கையினாலும், நாவினாலுமே முஸ்லிம்களுக்கு அதிகம் தொந்தரையும் கஷ்டமும் நஷ்டமும் உண்டாக முடியும். ஆதலால், நமது நாயகம் (ஸல்) அவர்கள், முஸ்லிம்கள் ஒருவர்க்கொருவர் கையினாலும், நாவினாலும் கஷ்ட நஷ்டங்களை யுண்டுபண்ணிக் கொள்ளக் கூடாது என்பதை இந்த ஹதீதின் மூலம் சுட்டிக்காட்டி இருக்கிறார்கள். ஒருவர் தன்னுடைய நாவையும் கையையும் ஒடுக்கிக் கொள்வாராயின் அவரால் பிறருக்கு எவ்வித தீங்கும் விளையாதென்பதும், பிறரால் அவருக்கு எவ்விதத் தீங்கும் விளைவதற்குக் காரணமில்லை என்பதும் இதனால் நன்கு தெரிய வருகிறது.

அல்லாஹுதஆலாவின் சந்தோஷத்தை—அவனது திருப்தியை அடைய வேண்டும் என்ற எண்ணத்தோடு பிறந்த இடத்தையும், பெற்றோரையும் சுற்றத்தாரையும், உற்றாரையும், உறவினரையும் விட்டுப் பரதேசம் சென்று குடியேறுபவருக்கு முஹாஜிர் என்று பெயர். இப்படிப்பட்டவர் அல்லாஹுதஆலாவின் திருப்தியையும், அவனது கட்டளைகளையும் மட்டிலுமே பெரிதென மதிக்க வேண்டுமேயன்று பொன்னையும், பொருளையும், சுற்றத்தாரையும் பெரிதென மதித்து அல்லாஹுதஆலாவின் திருப்தியை அலக்ஷியம் செய்யலாகாது. இவர் ஹிஜ்றத்துச் செய்து செல்ல வேண்டிய இடமும் அல்லாஹுதஆலாவை வணங்குவதற்கும், அவனது சன்மார்க்க கடமைகளைச் சரிவரச் செய்வதற்கு வசதியும் சௌகரியமும் உள்ள இடத்திற்கே செல்ல வேண்டும். நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களும், சங்கைவான்களான ஸஹாபிகளும் மக்காவிலிருந்து ஹிஜ்றத்துச் செய்தது இந்த ஓரே நோக்கத்தின் காரணமாகவே இருந்தது. இதன் கருத்து யாதெனில், அல்லாஹுதஆலா ஏவிய காரியங்களைச் செய்யவும், அவன் விலக்கிய காரியங்களைச் செய்யாமலிருக்கவும் சந்தர்ப்பம் ஏற்படவேண்டும் என்பதேயாகும். ஒருவர் பிற தேசம் சென்று அவ்விடத்தில் அல்லாஹுதஆலாவின் கட்டளைகளை—அவனது சன்மார்க்க விதி விலக்குகளைக் கவனிக்காமல் தனது இஷ்டப்படி பாபத்தையும் பழியையும் செய்து கொண்டிருந்தால் அவர் மார்க்கச்சட்டப்படி சரியான முஹாஜிர் ஆகமாட்டார். எனவே, இக் கருத்தைக் குறித்துத்தான் நாயகம் (ஸல்.) அவர்கள் மேற்கண்ட ஹதீதில் "அல்லாஹுதஆலா விலக்கிய காரியங்களை விட்டவரே முஹாஜிராவார்" என்று கூறி இருக்கிறார்கள். இவ்வாறு அவன் விலக்கியவைகளை விட்டு, அவன் விதித்தவைகளைச் செய்து, அவனது சன்மார்க்கத்தைக் கடைப்பிடித்தொழுகுவதே ஹிஜ்றத்தின் சாரமாகும். இதுவே ஹிஜ்றத்தின் உயிர்நாடியாகும்.



# பெண் கல்வி.

பேகம் ஸாஹிபா நவாப் ஸர் புலந்து ஜஸ் அவர்கள் பெண் கல்வியையும், பெண்கள் வழிதவறிப் போவதையும் பற்றி பத்திரிகைகளில் ஒரு வியாசம் எழுதி இருக்கிருர். அவ்வியாசம் பல பத்திரிகைகளிலும் பிரசுரமாகி இருக்கிறது. இவ்வியாசத்தை, பெண் கல்வியை ஆதரிப்போரும் நவநாகரீகத்தில் மூழ்கிய ஸ்திரீகளும் நன்கு கவனிப்பதுடன் "பெண் கல்வி", "பெண் கல்வி" என்று கூச்சல்போட்டுத் தங்களுடைய அறிவை மழுங்கச் செய்யாமலிருக்கும்படியும் வேண்டுகிருேம். பேகம் சாகிபா அவர்கள் எழுதிய வியாசத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் முக்கிய விஷயம் வருமாறு :—

"ஸ்திரீகள் வழிதவறிச் சென்று விடுதல் தற்போதைய தவறுதலான போதன முறையின் பலனேயாகும். தலைகாலில்லாத சில புத்தகங்களையும், வீணான கதைகளையும் கற்றுக்கொள்வதற்கே தற்போது கல்வி என்று கழறப்படுகிறது. ஒழுக்கத்தைச் சீர்திருத்தம் செய்து உன்னத நோக்கம், பரந்தசித்தம், நல்ல காரியங்களைச் செய்யவேண்டும் என்ற பேராவா உண்டாகுதல் ஆகியவைகளே கல்வியின் நோக்கமாக இருக்கவேண்டும். இத்தகைய காரியங்களைச் செய்யும் கல்வியே உண்மையில் சரியான கல்வியுமாகும். ஆனால், தவருன முறையில் கல்வி கற்பிப்பதால் பெண்குழந்தைகளின் ஒழுக்கம் கெட்டுப்போகிறது. அவர்களுடைய எண்ணங்களும் நினைப்புகளும் நாளுக்குநாள் வீழ்ச்சியடைந்து கொண்டுவருகின்றன. பேணுதல் என்பது அவர்களிடத்தில் அர்த்தமில்லாத ஒரு வார்த்தையாக இருக்கிறது. நவநாகரீகத்தில் மூழ்கி விதம் விதமான உடைகளை அணிவதில் ஆசை மிகவுள்ளோராக இருக்கிருர்கள். சொற்ப வருவாயைக் கொண்டு அவர்கள் திருப்தியடைவதில்லை. மதத்தைப்பற்றிய கவலை அவர்களுக்கு இருப்பதில்லை. குடும்ப காரியங்களைக் கவனித்தல், குழந்தைகளை வளர்த்தல் முதலிய காரியங்கள் இவர்களுக்குப் பெருங்கஷ்டமாகத் தோன்றுகிறது. பிரஜா அபிவிருத்தியைக் குறைப்பதற்காக கற்பத்தடை முறைகளைச் செய்வது இவர்களுக்குக் கேவலமாகத் தோன்றவில்லை. வீண் செலவுகளைச் செய்யும் வழக்கமுள்ளவர்களாகி விட்டனர். இவ்வாறு தாய்மார்களின் ஒழுக்கம் வழுக்கடைந்துவிட்டதால் அவர்களுடைய சந்ததியினரின் ஒழுக்கமும் கெட்டுத் தவறி விட்டது."

பெண் குழந்தைகளுக்குப் போதிக்கப்பட்டு வருகிற தற்போதைய கல்வி முறையிலுள்ள தீமையையும் அதன் நாசகரமான பலனையும் இதைப் பார்க்கினும் மிகத் தெளிவாக எடுத்துக் கூறமுடியாதென நம்புகிருேம். இவ்வியாசம் ஒருஆடவரால் எழுதப்பட்டதல்ல. பெண் இனத்தைச்சேர்ந்த ஒரு சீமாட்டியாலேயே எழுதப்பட்டது. இதனை 'மதப்பித்தர்கள்' என்று நாத்திகராலும், 'மார்க்கத்தையுணராதவர்கள்' என்று காதியானி லாகூர்பார்ட்டியினரின்கொள்கைகளைப் பின்பற்றுபவர்களாலும் தூற்றப்படும் கண்ணியம் வாய்ந்த உலமாக்கள் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவரால் எழுதப்படவில்லை. பெண் இனத்திற்கு ஏற்பட்டு வரும் தீமைகளை நன்குணர்ந்தவரும், பெண்களுக்கிருக்க வேண்டிய முக்கிய அம்சத்தை உணர்ந்தவரும் கௌரவ மிகுந்த குடும்பத்தைச் சேர்ந்தவருமான ஒரு ஸ்திரீயினுலேயே எழுதப்பட்டிருப்பதால் இதனை கல்விகற்ற ஸ்திரீகளும் மேனுட்டு மோகங் கொண்டோர்களும் கவனிப்பது அவசியமாகும். மனிதவர்க்கத்தில் சரிபகுதி ஜாதியினராகவுள்ள ஸ்திரீ ஜாதிக்கு கல்வி அறிவைப் புகட்டவும், அவர்களை முன்னேற்றமடையச் செய்யவும் எவரும் மறுக்கமாட்டார்கள். கல்வியைக் கற்றுக்கொள்வது ஆண் பெண் இருபாலருக்கும் பொதுவாகவுள்ள கடமையாகும் என்பதை அறியாத முஸ்லிம் ஒருவரும் இருக்கமுடியாது. தங்களது மனைவி மக்களும் தாய்மார்களும் கல்வியெனும் ஆபரணத்தால் அலங்கரிக்கப்பட்டிருப்பதைப் பார்க்க ஆசைப்படாத ஆடவனு மிருக்கமாட்டான். ஆனால், இப்பொழுது பெண்கல்வி என்ற விஷயத்தில் இருக்கிற அபிப்பிராய பேதம் அக்கல்வியைப் போதிக்கவேண்டிய முறை எது? பெண்களுக்கு அவசியமான கல்வி எது? என்ற விஷயத்தில் தானிருக்கிறது. ஆகவே, தற்போதைய போதனமுறைத் திட்டம்தான் சரியானது; ஆணும் பெண்ணும் கலந்திருந்து படிப்பதுதான் சிறந்த மார்க்கம் என்று ஒரு கூட்டத்தார் அபிப்பிராயப்படுகிருர்கள். இவர்களது இவ்வபிப்பிராயம் சரியானதன்று. இவ்விதப் போதனமுறையினுல் என்ன பலன் கிடைக்கிறது? துர்நடத்தையையும் அடங்காமையையும் உண்டு பண்ணுவதுதான் கல்வியென்பதாயின் நல்லொழுக்கம், நன்னடத்தை, பரந்த நோக்கம், உயர்ந்த லக்ஷியம் இவைகளை உண்டுபண்ணுவதெங்ஙனம்? இவைகளை உற்பத்தி செய்வதற்காக அல்லது இவைகள் இல்லாமற்போவதை விட்டுக் காப்பதற்காகத் தற்போதைய போதனமுறைத் திட்டத்தையும், பாடப் புத்தகங்களையும் ஆக்ஷேபிப்பது பெண் கல்வியே கூடாதென்று மறுப்பதாக இருக்கிறதா? என்று மற்ருெரு கூட்டத்தார் கூறுகின்றனர்.

பேகம் சாகிபா ஸர் புலந்துஜங் அவர்கள் தற்போதைய போதனமுறைத் திட்டத்தைப்பற்றிக் கூறி இருக்கிற இவ்வபிப்பிராயத்தைச் சிலர் ஒருதலைப் பக்ஷமான அபிப்பிராயம் என்று கருதக் கூடும். இவர் கூறி இருக்கும் அபிப்பிராயம் ஒருதலைப் பக்ஷமல்லவென்பதற்கு நம்மிடம் மற்ருெரு சாக்ஷியமுமிருக்கிறது. சென்றமாதத்தில் பஞ்சாப் மாகாணத்திலுள்ள கிராமக் கமிஷனர் பஞ்சாப் மாகாண கவர்ன்மெண்டுக்கு, கிராமப் புனருத்தாரணத்தைப் பற்றியும், கிராம வாழ்க்கையைப் பற்றியும் சமர்ப்பித்த சீர்திருத்தத் திட்டத்தில் அநேகம் ஆலோசனைகளைக் கூறி இருக்கிருர். அதில் அவர் கூறிய விஷயங்களுள் "பஞ்சாபிலுள்ள படித்த ஸ்திரீகள் பலர் வீட்டுக்காரியங்களை-குடும்பக் காரியங்களைக் கவனிப்பதில்லை என்றும், அவ்வேலைகளைக் கவனிக்க அவர்கள் இஷ்டப் படுகிருர்களில்லை என்றும் கூறி இருக்கிருர். கவர்ன்மென்ட் உத்தியோக வர்க்கத்தைச் சேர்ந்த ஒரு கமிஷனர் தற்போதிருந்துவரும் கல்வித் திட்டத்தைப்பற்றி, இதனைப் பார்க்கினும் அதிகமாக வேறு எதையும் கூற முடியுமா? என்பதை நேயர்கள் கவனிக்க வேண்டும். கமிஷர் கூறிய இம்முறையீட்டையும் பேகம் சாகிபா அவர்கள் கூறிய விஷயங்களையும் சீர்தூக்கிப் பார்ப்பவர்களுக்கு தற்போதைய போதனமுறையின் பலன், ஸ்திரீகள் குடும்பக் காரியத்தைக் கவனிக்காதவர்களாகவும் சிறந்த ஒழுக்கங்கள் அதாவது ஸ்திரீகளுக்கு இருக்கவேண்டிய இன்றியமையாத லக்ஷணங்கள் ஆகியவைகளில்லாதவர்களாகவும் ஆகுவதைத் தவிர வேறென்றுமில்லை என்பது புலனுகும்.

இதனை யுத்தேசித்தே நமது மார்க்கத் தலைவர்களான உலமாக்கள் பெண் கல்வி விஷயத்தில் இருக்கிற சீர்கேட்டைப்பற்றி எடுத்துக் கூறினுல் இஸ்லாம் மதத்தின் பரம விரோதிகளான வழிகெட்ட மிர்ஸாயிகளும் காதியானிகளும், பெண் கல்வியை முல்லாக்கள்

எதிர்க்கிறார்கள், ஸ்திரீகளுக்குக் கல்வி போதிப்பது முல்லாக்களுக்கு இஷ்டமில்லை என்று காது செவிடுபடும்படி கூச்சலிடுகின்றனர். இவர்கள் எவ்வளவுக்குக் கூச்சலிட்டாலும் உலகம் உண்மையை உணர்ந்து கொள்ளாத அளவுக்கு அவ்வளவு முட்டாட்டனமாக இல்லை. ஆதலின், அவர்களது ஜம்பம் இனி பலியாது. எனினும், நம்மவர் இவ்விஷயத்தில் இனியேனும் கவனம் செலுத்தி தக்க சீர்திருத்தங்களைச் செய்து நமதுசகோதரிகளுக்கும் தாய்மார்களுக்கும் கல்வியெனும் அறிவமுதை முன்னிலும் பன் மடங்காகச் சிறந்த முறையில் ஊட்ட முன் வருவார்களாக.

# மிர்ஜா மஹ்மூதின் இரகசிய ஆலோசனை

(அமானுல்லாகான் நியாஜீ எழுதுவது)

காதியானிகள் அனைவரும் அபாயகரமானவர் களேயாவார்கள். ஆனால், இவர்களெல் லோரிலும் அதிகமான அபாயகரமாகவும், நய வஞ்சகமாகவும் இருப்பவர்கள் ஹஸனுப்னு ஸபாஹ் மிர்ஜாபஷீருத்தின் மஹ்மூதைப் பின் பற்றுபவர்களாவார்கள். இவர்களை மஹ்மூதி காதியானீ என்று பொதுஜனங்கள் அழைக் கின்றனர். இக்கூட்டத்தாரின் வேலைகளும் கிரியைகளும் பகிரங்கம், அந்தரங்கம் என்று இரண்டு வகையாக இருக்கின்றன. இவர்கள் பகிரங்கமாகச் செய்யும் காரியங்களின் விபரம் என்னவெனில், எப்பொழுதேனும் ஒரு இயக் கம் தேசத்தில் தோன்றிவிடுமாயின் இவர் கள் முஸ்லிம்களின் அபிமானத்தை அடைவ தற்காக உடனே அதில் குதித்து வந்து சேர்ந்துவிடுவார்கள். நமக்கேற்படும் கஷ் டத்தைக் காதியானிகள் கண்டு சகிக்க முடி யாது இப்படித் தானே வந்து விழுகின்றன ரென்று சில முஸ்லிம்கள் நினைத்துக் கொள் கின்றனர். ஆனால், அந்தக் காதியானிகளின் நோக்கம் முஸ்லிம்களுக்கு அனுதாபம் காட்ட வேண்டுமென்பதல்ல. தங்களுடைய ருக்ஷு மக்கயிரைச் சரிப்படுத்திக்கொள்ள வேண்டும் என்பதுதான் இவர்களது முதல் வேலையாக இருக்கிறது.

அந்தரங்கமான காரியங்கள் என்னவெனில், மிர்ஜாபஷீருத்தீன் மஹ்மூது தம்முடைய ஹவாரிய்யீன் (சிஷ்யர்)களை காதியானுக்கு ஸ்பெஷலாக வரவழைக்கிறார். அந்த ஜனங்களுடன் கலந்து ஆலோசனை செய்துகொண்டப் பின் அந்த இரகசிய வேலைகள் நிறைவேற்றப் படுகின்றன. இவ்விரகசிய வேலைகளைப் பற்றி யான் கூறும் முன் மிர்ஜாபஷீருத்தீன் மஹ்மூது ஆலோசனைச் சபையில் செய்த பிரசங்கத்திலிருந்து ஒரு விஷயத்தை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். அதனை நேயர்கள் ஊன்றிக் கவனிப்பது அவசியமாகும். மிர்ஜா மஹ்மூது தமது பக்தர்களிடம் கூறிய விஷயம் வருமாறு :—

“இன்னும்வேறிரு விஷயங்கள் இருக்கின்றன. அவைகளைப்பற்றி நண்பர்களிடம் பிரைவேட் ஆலோசனை செய்வேன். அவைகளிலொன்று என்னவெனில், தற்போதைய பித்னா சம்பந்தமாக நாம் என்ன செய்யவேண்டும்? என்பதேயாகும். மற்றொன்று முனாபிக் என்று ஏற்பட்டவர்கள் சம்மந்தமாக நாம் எப்படிப்பட்ட வேலை முறைகளைக் கையாள வேண்டும் என்றே........இது சம்பந்தமாக ஏதேனும் நடவடிக்கை எடுத்துக் கொள்வதற்கு முன் அன்பர்களிடம் ஆலோசனை செய்து கொள்ள விரும்புகிறேன். இது பிரைவேட் ஆலோசனையாக இருக்குமாதலின் விஸிட்டர்களை அப்புறப்படுத்தப்படும்.”

மிர்ஜா மஹ்மூதுடைய பிரசங்கத்திலிருந்து எடுத்தெழுதப்பட்ட இவ்வாக்கியங்களில் அவர் கூறி இருக்கிற “பிரைவேட் ஆலோசனை”யை அவர் யாரைப்பற்றித் தமது பக்தர்களுடன் கலந்து பேசப்போகிறார் என்று நினைத்து நீங்கள் பிரமியமடையக் கூடும். கேளுங்கள்! இதில் பிரமியமடைவதற்கான விஷயம் எதுவுமில்லை. அவரது மதத்தில் சேராமலும் அவரை கலீபா என்று ஒப்புக்கொள்ளாமலும் இருக்கிற ஜனங்களை நாசம்



என்ற படுகுழியில் இறக்கிவிடுவதற்காக முதலாவதாக ஆலோசனை செய்வார். இம்மாதிரியான ஜனங்கள் காதியானிலுள்ள முஸ்லிம்களும், ஹிந்துக்களும், சீக்கியர்களுமே யாவர். இவர்களுக்கு மிர்ஜா மஹ்மூதுடைய சந்நிதானத்தில் “பித்னா” என்ற பட்டம் கிடைத்திருக்கிறது. இரண்டாவது பிரைவேட் ஆலோசனை காதியானிகளைப் பற்றியதே யாகும். எனினும், இவர்கள் மனத்திலொன்று வாயிலொன்றுமாக இல்லாமல் உள்ளபடி பேசுகிறவர்களாக இருக்கிறார்கள். ஆதலின், இவர்கள் பிரைவேட் ஆலோசனையில் சேர்த்துக் கொள்ளப்படாமல் ஒதுக்கி வைக்கப்பட்டவர்கள். இவர்களை மிர்ஜாமஹ்முது “முனாபிக்” என்று கூறுகிறார்.

## முஹம்மது ஹுஸைன் பட்டாலவி, முஜாஹித் புகாரா என்ற முஹம்மது அமீன் கான் ஆகியவர்கள் கொலை செய்யப்படல்.

சமீபகாலத்திற்கு முன் மிர்ஜா மஹ்மூதின் பிரைவேட் ஆலோசனைகளினால் ஆவேசம் கொண்ட காதியானி பிதாயீ (மஹ்மூதுக்காகத் தம்மை அற்பணஞ் செய்தவர்)களின் செய்கைகள் இரண்டு முறை வெளியில் வந்திருக்கின்றன. ஒன்று, காஜீ முஹம்மது அலீ என்ற காதியானீ, முஹம்மது ஹுஸைன் என்ற பெயருள்ள ஒரு முஸ்லிமை பட்டாலா என்ற ஊருக்குப் பக்கத்தில் கொலை செய்துவிட்டார். மற்றொன்று, முஹம்மது அமீன் கான் முஜாஹித் புகாரா என்பவர் “ஹறம் பூமி” என்று காதியானிகள் கூறிவருகிற காதியான் கிராமத்திலேயே பத்தஹ் முஹம்மது என்ற காதியானியின் கையால் கொலை செய்யப்பட்டார். இந்த பத்தஹ் முஹம்மது என்பவர் காதியானி ஜமா அத்தில் “நாஜிரே அஃலா” (பிரதம மேற்பார்வைக்காரர்) என்ற உத்தியோகம் பார்த்து வருகிறார். முஹம்மது ஹுஸைன் என்ற முஸ்லிமைக் கொலை செய்த காஜீமுஹம்மதுஅலி என்ற காதியானிக்குத் தூக்குத்தண்டனை விதிக்கப்பட்டது. ஆனால், முஜாஹித் புகாராவைக் கொலை செய்த பத்ஹு மஹ்மூது இன்னமும் மிர்ஜா மஹ்மூதுக்கு வலதுகையாக இருந்து வருகிறார். ஆன்மாவைக்கலங்கச்செய்யும் இந்தச் சம்பவங்கள் இருக்கும்போது அமைதிக்கு விரோதிகளாகவுள்ள இக்கூட்டத்தை “சமாதானப் பிரியர்” என்று நற்சாக்ஷிப் பத்திரம் கொடுக்கக்கூடிய முஸ்லிம் எவரேனுமிருக்க முடியுமா? இவ்வளவு பயங்கரமாகவும் காட்டுமிராண்டியாகவுமுள்ள இக்கூட்டத்தாரை முஸ்லிம்கள் என்று இஸ்லாத்தின்பால் சம்பந்தப்படுத்துவது இஸ்லாத்தை அவமதிப்பதாகும் என்பது நிச்சயம்.

## வாள், துப்பாக்கி முதலிய யுத்தக்கருவிகள் வைத்துக் கொள்ளும்படி மிர்ஜா மஹ்மூதுடைய கட்டளை.

தமது பக்தர்களுடன் பிரைவேட் ஆலோசனை செய்கிற இதே மிர்ஜா மஹ்மூது தமது பக்தர்களைக் காதியானியிலிருந்து வழியனுப்பும்போது ஆயுதங்களை வைத்துக் கொள்ளும்படி அவர்களுக்குக் கட்டளையிடுகிறார். அவர் கூறிய கட்டளை வருமாறு:—

“வாள் வைத்துக்கொள்ள அனுமதியுள்ள இடங்களில் அங்கு அன்பர்கள் வாள்களை வைத்துக்கொள்ள வேண்டும். வீர தத்துவத்தையும் துணிச்சலையும் உண்டுபண்ணக் கூடிய சாமான்கள் கிடைக்கக் கூடுமாயின் அவைகளை அவசியமாகச் சேகரித்து வைத்துக்கொள்ள வேண்டும் என்ற விஷயத்திலும், துப்பாக்கிவைத்துக் கொள்ள உத்தரவு கிடைக்கக் கூடியவர்கள் துப்பாக்கிவைத்துக்கொள்ளவேண்டும், வாள்வைத்துக் கொள்ள அனுமதியுள்ள இடங்களில்வாள் வைத்துக் கொள்ளவேண்டும் என்ற விஷயத்திலும் உங்களது கவனத்தைத்திருப்ப விரும்புகிறேன்”

பிரைவேட் ஆலோசனையின் காரணமாக குற்றமற்ற இருவர் கொலையுண்டதுபோல ஆயுதங்களை வைத்துக்கொள்ளும்படி கட்டளையிடுவதன் மூலம் குற்ற மற்ற முஸ்லிம்களுக்கு நஷ்டத்தை விளைவித்து அவர்களைப் பயப்படச் செய்துவிடவேண்டும் என்பதே மிர்ஜா மஹ்மூதின் கருத்து என்பதை இந்த அறிக்கையைப் படித்த ஒவ்வொரு முஸ்லிமும் அறிந்து கொள்ள வேண்டிய தவசியமாகும். எனவே, கூடிய சீக்கிரத்தில் 5000 காதியானீ தொண்டர்கள் நேஷனல் லீகின் சார்பாக வாள்களும், துப்பாக்கிகளும் வாங்கிக்கொண்டு வெளியேறுபவர்களாக இருக்கிறார்கள். இவர்களது வேலை “ஸ்பெயின் முஸ்லிம்களைப்போல் இவ்வுலகத்திலிருந்தே முஸ்லிம்களை அகற்றிவிடும் வேலையாக இருக்கும். எனவே, இவ்வித நிலைமையில் ஒவ்வொரு முஸ்லிமும் தங்களது தற்காப்புக்காக அனுமதியின்மீது வாள்களை வைத்துக்கொள்வதும், ஒற்றுமையாக இருந்து

வரப்போகிற சமயத்திற்கு ஆயத்தமாக இருக்க வேண்டியதும் முதல்கடமையாக இருக்க வேண்டியது அவசியமாகும்.

அஹ்ரார் சபை மிர்ஜாயிகளின் இக்கெட்ட எண்ணங்களை உணர்ந்துகொண்டதற்கு அல்லாஹுதஆலாவுக்கு நன்றி செலுத்தவேண்டும். இந்த வழிகெட்ட வகுப்பினரை எதிர்ப்பதற்காக கட்டுப்பாடான முறையில் அச்சபை தயாராகிக்கொண்டிருக்கிறது. மிர்ஜாயிகளின் அசூயையான இந்த நோக்கங்களை அஹ்ரார் சபை உணராமல் அஜாக்கிரதையாக இருக்கவில்லை. மிர்ஜாமஹ்மூதின் 5 ஆயிரம் தொண்டர்களை எதிர்ப்பதற்காக ஆயிரக்கணக்கான தொண்டர்கள் அஹ்ரார் சபையில் தயாராக இருக்கிறார்கள். ஒரு லக்ஷம் தொண்டர்கள் சேர்க்கப்பட்டு வருகிறார்கள். ஆகவே அஹ்ரார் சபையின் தொண்டர்படை ஜாபிதாவில் தங்களது பெயரைப் பதிவுசெய்து கொள்வது ஒவ்வொரு முஸ்லிமுடைய கடமையாகும்.

"முஜாஹித்"

---

# தென் அமெரிக்காவில் காதியானீ பித்னா?

காதியானீ ஜமா அத்தாரின் வஞ்சக ஏமாற்றுக் காரியங்களுக்கு எவ்வித வரையரையுமில்லை. ஷீஆ மதத்தில் 'தகிய்யா'செய்யும் முறைஅவர்களது மதக்கொள்கையில் ஒரு அம்சமாக இருப்பதுபோல காதியானீ ஜமாஅத்தார்கள் முஸ்லிம்களை காதியானிகளாக்குவதற்காக சகலவிதமான பொய்யையும் புழுகையும் சொல்வதும், முஸ்லிம் பொது ஜனங்களை ஏமாற்றுவதும் அவர்களது ஜமாஅத்தின் நடைமுறையில் ஒரு முக்கிய அம்சமாக ஏற்பட்டுவிட்டன போலும். இதுபோல் கிறிஸ்துவ சமூகத்திற்குள்ளும் ஒரு பிரிவாரிருந்தனர். நேர்மையான ஒரு முடிவை அடைவதற்காக தவறானவும், தகாதனவுமான எத்தனை முறைகளைக் கைகொண்டாலும் அது குற்றமான செய்கையன்று; அப்படித் தவறான முறைகளைக் கையாளுவது சரிதான்; அது மத சம்மதமானதுதான் என்பது அந்தப் பிரிவாரின் கருத்தாக இருந்தது. இஸ்லாமிய உலகில் புதியதொரு நபித்துவக் கொள்கையை உண்டுபண்ணிவிட வேண்டுமென்பதையும், இந்தப் புதிய நபித்துவத்தை அஸ்திபாரமாகக் கொண்டு புதியதொரு உம்மத்தை (வகுப்பை) உற்பத்தி செய்யவேண்டுமென்பதையும், இந்த உம்மத்து காதியானுக்குக் கீழில் இருக்க வேண்டுமென்பதையும் தவிர இந்த ஜமா அத்தார் செய்யும் வஞ்சகக் காரியங்களுக்கு வேறு எந்த நோக்கமும் கிடையாது இவர்கள் செய்யும் இவ்வஞ்சகக் காரியங்களுக்கெல்லாம் அவர்களது மேற்கண்ட நோக்கமே முக்கிய காரணமாகும். சென்ற மாதம் பிரசுரமான "ஈமான்" பிரதியில் ஒரு அமெரிக்க முஸ்லிமுடைய கடிதம் வெளியிடப்பட்டிருக்கிறது. அதனால் ஹஜ்றத் முஹம்மதுர்ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களது நபித்துவத்தின்காலம் முற்றுப்பெற்றுவிட்டது; ஹுஜூர் (ஸல்.) அவர்களுக்குப் பதிலாக மிர்ஜா குலாம் அஹ்மதின் நபித்துவக்காலம் ஆரம்பமாகி இருக்கிறது" என்று இந்தக் காதியானிக் கூட்டத்தினர் உலகமெங்கும் பிரசாரம் செய்துவருகிறார்கள் என்று தெரியவருகிறது. இந்தக் கூட்டத்தாரின் பிரசாரகர்கள் அந்நியதேசம் சென்று அங்கு விஷயமுணராத முஸ்லிம்களை அணுகி அவர்களை ஏமாற்றிக் காதியானியாக மாற்றுவதற்காக,

"உலகத்திலுள்ள எல்லா முஸ்லிம்களிடமும் எங்களுக்கு நெருங்கிய சம்மந்தமிருக்கிறது; இங்கிலாந்திலுள்ள மஸ்ஜிதும் கூட எங்களது தாண்டுதலின் பேரிலேயே கட்டப்பட்டிருக்கிறது; உலகம் முழுவதிலுமுள்ள முஸ்லிம்களனைவரும் குலாம் அஹ்மதை நபியென்று ஒப்புக்கொண்டு விட்டனர்; இப்பொழுது ஒருவர் குலாம் அஹ்மதின் நபித்துவத்தை மட்டிலும் ஈமான்கொண்டு விட்டால் அவர் முஸ்லிமாகிவிட முடியும்; அஹ்மதியர் (காதியானி)கள் மாத்திரம்தான் ஜும்ஆத் தொழுகைக்கு இமாமத்துச் செய்யமுடியும்."

என்றும் தாவாச் செய்துவருவதாக அக்கடிதத்திலிருந்து தெரியவருகிறது.

ஸீரத் பிரசுர இயக்கம் உலகமெங்கும் பரவி இருப்பதன் காரணமாக ஸீரத் கமிட்டியின் பெயர், உலகமெங்கும் கியாதிபெற்று விளங்குகிறது. ஆதலின், எங்கேனும் மதசம்பந்தமான ஏதேனும் ஒரு பித்னா உண்டாகுமாயின் அங்குள்ள முஸ்லிம்கள் ஸீரத் கமிட்டியையே தங்களுக்கு வழிகாட்டியாக மதித்து அக்கமிட்டியை நோக்குகின்றனர். இப்பொழுது புதிதாக வந்த தபாலில் "டச்சுகயானா"வில் இருந்து அதாவது தென் அமெரிக்காவில் இருந்து நமக்கு ஒரு கடிதம் கிடைத்திருக்கிறது. அக்கடிதத்தில் கண்ட விஷயம் மிகவும் வருந்தத்தக்க விஷயமாகும். இக்கடிதத்தை எழுதியவர் ஸர்னியாம் தீவில் வசிப்பவர். அவரது பெயர் அலிபக்ஷ் சாகிப் என்பது. இவர் எழுதிய கடிதம் வருமாறு:—

"எங்கள் நாட்டிலுள்ள முஸ்லிம்கள் மிகவும் பெரிய ஆபத்துக்குள் சிக்கி இருக்கிறார்கள். எங்களது தீவில் இப்பொழுது புதியதொரு கூட்டம் தோன்றி இருக்கிறது. அக்கூட்டத்திற்கு மிர்ஜாயி காதியானிக் கூட்டம் என்று பெயர். ஹஜ்றத் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களுக்கு மிஃராஜ் நடைபெறவில்லை; அவர்களுடன் நபித்துவம் முற்றுப்பெற்று விடவில்லை; அவர்கள் கடைசி நபியல்ல என்பதாக அந்தக் கூட்டத்தார் கூறுகின்றனர். இந்த ஜனங்கள் ஹஜ்றத் ஈஸா அலைஹிஸ் ஸலாமவர்களுக்குத் தந்தை இருப்பதாகக் கூறுகிறார்கள். அவர்களைச் செத்துப்போனவர் என்ற பெயரால் அழைக்கின்றனர். ஹஜ்றத் பீபிமர்யம் ஸித்தீக்காவை—நஊதுபில்லாஹி மின்ஹா—விபசாரி என்று கூறுகிறார்கள். வட்டி ஹலால் என்று இவர்கள் அபிப்பிராயப்படுகின்றனர். ஆடவர்களும் பெண்டீர்களும் ஒன்றாகச் சேர்ந்திருந்து தொழுகையை நிறைவேற்றுகின்றனர். இந்த ஜனங்கள் இங்குள்ள அஹ்ல இஸ்லாம்களை முர்த்தத்துகளாக ஆக்குகின்றனர். ஆகவே தாங்கள் போன்றவர்கள் இவ்விஷயத்தில் கவனஞ் செலுத்தவில்லையாயின் சில நாட்களுக்குள் இங்கு இஸ்லாத்தின் பெயர் அழிந்துவிடும். இங்கு எங்களிடம் இவர்களுக்கு பதில் கொடுப்பதற்குத் தகுந்த இஸ்லாமிய கிரந்தங்கள் இல்லாமலிருப்பதுதான் எங்களுக்கு மிகவும் பெரிய கஷ்டமாக இருக்கிறது."



இந்தியாவிலுள்ள நிலைமை இக்காதியானிப் பிரசாரத்திற்குத் தகுந்தவாறு இணக்கமாக இல்லை என்பதை இப்பொழுது இக்காதியானிக் கூட்டத்தார் உணர்ந்து, இந்தியாவுக்கு வெளியில் தங்களது வழிகேட்டைப் பாவச் செய்துகொண்டிருக்கிறார்கள் என்றும், தங்களது சக்தியை இன்னும் பலப்படுத்தி ஒன்று சேர்த்துக்கொள்ள முயற்சி செய்கிறார்கள் என்றும் இக்கடிதத்திலிருந்து தெரியவருகிறது. காதியானிக்கூட்டத்தாரின் இப்புதிய முயற்சிக்கு உடனுக்குடன் பரிகாரம் தேடவேண்டியது அவசியமாகும். இல்லையேல், விஷயமறியாத வெளி நாடுகளில் இந்தத் தொத்து நோய் பலமாகப்பரவி விடுதல் கூடும்.

குறிப்பு:—சோதரீர்! மேற்கண்ட வியாசம் அகில இந்திய ஸீரத் கமிட்டியாரால் லாகூரை அடுத்த "பட்டி" எனுமூரிலிருந்து பிரசுரிக்கப்படும் "ஈமான்" என்ற பத்திரிகையில் பிரசுரமாகி இருக்கிறது. காதியானிக் கூட்டத்தாரின் நயவஞ்சகச் செயல்களும் அவர்களது மோசக் கருத்தான முயற்சிகளும் நம்மவரிற் பலருக்குத் தெரியாத விஷயங்களன்று. இக்கூட்டத்தார் இவ்வுலகில் பிறமதத்தாரிடம் சென்று தங்களது மதக்கொள்கையை ஸ்தாபித்துக்கொள்ள ஆற்றலற்றவர்கள். என்றாலு முஸ்லிம்கள் எங்கெங்கு இருக்கிறார்களோ அங்கெல்லாம் சென்று சமயசந்தர்ப்பத்திற்குத் தக்கவாறு பலமாதிரி வேஷம் போட்டு முஸ்லிம்களுக்குள் பிளவையும் மாச்சரியத்தையும் உண்டுபண்ணிவிட்டு அதனை உலமாக்கள்மீது சுமத்திப் பொதுஜனங்களுக்கு உலமாக்கள்பால் அறுவருப்பு உண்டாகும்படி செய்வதும், உலமாக்களுக்குச் செல்வாக்குக் குன்றியபின் தங்களுக்கென ஒரு கூட்டத்தை யுண்டுபண்ணிக்கொண்டு பித்னாவை விளைவிப்பதும் இவர்களது சர்வ சாதாரணமான தொழிலாகிவிட்டது. ஆதலில், இக்குழாத்தினரின் மாய வேலைகளில் சிக்காமல் அதிஜாக்கிரதையாக இருக்கவேண்டுமென எச்சரிக்கை செய்கிறோம்.

---

## சந்தாநேயர்கட்கு!

1935-ம் ஆண்டுக்கு சந்தா செலுத்தாமலிருக்கும் நண்பர்கட்கு அடுத்த டிஸம்பர் மாதத்திய மாசிகையை வி. பி. செய்ய முடிவு செய்யப்பட்டிருப்பதால் அன்பர்கள் அதற்குள் தங்கள் சந்தா பாக்கியை அனுப்பிவைப்பார்களென எதிர்பார்க்கிறோம். இம்மாதம் கடைசிக்குள் தங்கள் சந்தாபாக்கிகளை அனுப்பிவைக்காமலிருப்பவர்களுக்கு அடுத்த மாசிகை வி. பி. செய்யப்படுமென்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# வேதங்களின் தன்மை.

அடியிற்கண்ட வியாசம் பிஜ்னூரில் பிரசுரமாகும் "பாரான்" என்ற மாசிகையிலிருந்து எடுக்கப்பட்டது. ஷை பத்திரிகையில் வினு விடை என்ற தலைப்பின்கீழ், வேதங்கள் தெய்வவாக்காக இருக்கின்றனவா? அல்லவா? என்பதைப்பற்றி இவ்வியாசமெழுதப்பட்டிருக்கிறது. இவ்வியாசம், கிறிஸ்துவ நண்பர்கள் முஸ்லிம் பாமரர்களை ஏமாற்றுவதற்பாக அவர்களால் வினவப்படும் ஒரு முக்கிய வினுவிற்கு விடையாக இருப்பதாலும், இப்படிப்பட்ட வினு நமது நாட்டிலுள்ள கிறிஸ்துவ மிஷனரிமார்கள் முஸ்லிம் பொதுஜனங்களிடம் கேட்பது சகஜமாக இருப்பதாலும் இவ்வியாசம் நமது சகோதரர்களுக்கு மிகவும் பிரயோஜனமாக இருக்குமெனக்கருதி அதன் சாராம்சத்தைக் கீழே தருகிறோம்:—

முஸ்லிம்கள் பரிசுத்த வேதாகமங்களை (பைபிள் பழையஏற்பாடும்-புதியஏற்பாடும்) விசுவாசங்கொண்டிருந்தும் அவைகள் தெய்வவாக்கானவை என்பதை ஒப்புக்கொள்கிறார்களில்லை. "கிறிஸ்துவர்களிடமுள்ள தௌராத், ஜபூர், இஞ்ஜீல் வேதங்கள் புறட்டப்பட்டனவாகவும், திருத்தப்பட்டன வாகவுமிருக்கின்றன வாதலால் அவைகள் தெய்வவாக்காக இருந்த அந்தஸ்தை அவ்வேதக்காரர்களே அழித்துவிட்டனர்" என்று முஸ்லிம்கள் கூறுகின்றனர். ஆனால், தௌராத். ஜபூர், இஞ்ஜீல் ஆகிய வேதங்களை நேர்வழிகாட்டி என்றும், பிரகாசம் என்றும் திருகுர்ஆன் சிறப்பித்துக் கூறுவதுடன் திருகுர்ஆனைப்போல் இந்தவேதங்களையும் விசுவாசிக்கவேண்டும் என்றும் அவைகளைப் பின்பற்றி நடக்கவேண்டும் என்றும் கட்டளையிட்டிருக்கிறது.

"விசுவாசங் கொண்டவர்களே! அல்லாஹ்வையும் அவனது தூதரையும், அத்தூதருக்கு அருளப்பட்ட வேதத்தையும்; முன்னர் அருளப்பட்ட வேதத்தையும் விசுவாசியுங்கள்" என்றும்,

"வேதம் கொடுக்கப்பெற்றவர்களே! உங்களுடன் இருப்பதை உண்மைப் படுத்தும்படியானதாக நாம் அருளியிருப்பதை விசுவாசியுங்கள்" என்றும்'

"மேலும், தௌராத்தையும், இஞ்ஜீலையும் இதற்கு முன்னர் ஜனங்களுக்கு நேர்வழி காட்டியாக அவன் இறக்கினன்"

என்றும் திருகுர்ஆனில் ஆங்காங்கு பல கட்டளைகள் இருக்கின்றன. திருகுர்ஆனில் இவ்வாறு தெளிவான பல கட்டளைகள் இருக்கும்போது "பரிசுத்த வேதாகமங்கள் திருத்தப்பட்டும் மாற்றப்பட்டும் போயினவாதலால், அவைகளைப் பொதுவாக விசுவாசிக்க வேண்டுமேயன்றி அவைகளிலுள்ள விஷயங்கள் ஆதாரமாக எடுத்துக்கொள்ளத் தகுந்தனவல்ல என்றும், மாற்றப்பட்ட இந்த வேதங்களை விசுவாசிக்கவேண்டும் என்பது முஸ்லிம்களது கடமையுமல்ல என்றும் முஸ்லிம்கள் கூறும் வாதங்களை எங்ஙனம் ஒப்புக்கொள்ளமுடியும்" என்று கிறிஸ்துவர்கள் கூறுவதை அவர்களில் படித்தவர்களுடன் சம்பாஷணை செய்வதிலிருந்து தெரிந்துகொள்கிறோம்.

மேலும், கிறிஸ்துவ நண்பர்கள் மேலே கூறப்பட்ட திருகுர்ஆன் வசனங்களைச் சுட்டிக்காட்டி பரிசுத்த வேதாகமத்தை (பைபிளை)ப் படிக்கும்படி கூறுகின்றனர். அதற்கு நாம் "உங்களுடைய வேதம் புறட்டப்பட்டதாக இருப்பதால், அதன்மீது உறுதியாக ஈமான் கொள்ள முடியாது" என்று கூறுகிறோம். அதற்கவர்கள் அடியிற்கண்ட வினுக்களை நம்மிடம் கேட்கின்றனர் அக்கேள்விகள் வருமாறு:—

1. பரிசுத்த வேதாகமங்களில் (பைபிளில்) எப்பொழுது திருத்தமேற்பட்டது?

2. அதனைத் திருத்தியவர்கள் யார்?

3. அப்படித் திருத்தியதன் நோக்கம் யாது?

4. ஒரு பிரதிமட்டிலும்தான் திருத்தப்பட்டதா? உலகத்தின் நாற்றிசைகளிலும் கணக்கில்லாமல் பரவி இருக்கிற எல்லாப் பிரதிகளிலும் திருத்தமேற்பட்டிருக்கிறதா?

## விடைகள்.

திருகுர்ஆனின் ஆயத்துகளைக் கொண்டு கிறிஸ்துவர்கள் ஆதாரங்காட்டித் தங்களது பரிசுத்த வேதாகமங்கள் சம்மந்தமாகக் கூறப்பட்டுள்ள சந்தேகங்களுக்கும், ஐயங்களுக்கும்



பதில்சொல்லி வருவது புதிய விஷயமல்ல. இன்றைக்குப் பல்லாண்டுகளுக்கு முன்னரே இவ்வபிப்பிராயங்கள் மிக விரிவாக எழுதப்பட்டும் விவாதிக்கப்பட்டு மிருக்கின்றன. கிறிஸ்துவப் பாதிரிமார்கள் இதனைப்பற்றி வெகு காலத்திற்கு முன்னரே தங்களது புத்தகங்களில் எழுதி இருக்கிறார்கள். பாதிரி பண்டர் என்பவரால் எழுதப்பட்ட "மீஜானுல் ஹக்கு", பாதிரி இமாதுத்தீன் என்பவரால் எழுதப்பட்ட "ஹிதாயத்துல் முஸ்லிமீன்" பாதிரி ஸப்தர் அலி என்பவரால் எழுதப்பட்ட "நியாஜ் நாமா" ஸர். வில்லியம் முயூர் என்பவரால் எழுதப்பட்ட "ஷஹாதத்த குர்ஆனி பர் குத்துபேரப்பானி" முதலிய புத்தகங்களிலும், இதர சிறு பிரசுரங்களிலும் கிறிஸ்துவப் பாதிரிமார்கள் முஸ்லிம்களை ஏமாற்றுவதற்காக இதுபோன்ற அநேகம் சூழ்ச்சிகளையும் ஏமாற்றுதல்களையும் செய்திருக்கிறார்கள். ஆனுல், முஸ்லிம்களிடம் இப்படி வினுக்கடாவும் இக்கிறிஸ்துவர்கள் தங்களது தாவாவுக்கு திருகுர்ஆனிலிருந்து ஆதாரங்கள் எடுத்துக் கூறி இருப்பதாக நடிக்கின்றனரே யன்றி, அந்த ஆயத்துக்கள் என்ன தெரிவிக்கிறது என்பவைகளைப்பற்றிக் கவனிக்காமலே இருந்துவிட்டனர். பரிசுத்த வேதாகமங்களைப்பற்றி திருகுர்ஆன் ஒப்புக்கொண்டும், நிராகரித்தும் கூறியுள்ள விஷயங்களைப்பற்றி அவர்கள் கவனஞ்செலுத்துவதே இல்லை. இந்த இடத்தில் மூன்று விஷயங்களை ஞாபகத்தில் வைக்கவேண்டும். அவை வருமாறு:—

### (1) திருகுர்ஆனின் தீர்ப்பு.

பரிசுத்த தௌராத் வேதம் ஹஜ்றத் மூஸா அலைஹிஸ்ஸலாமவர்களுக்கும், ஜபூர் வேதம் ஹஜ்றத் தாவூத் அலைஹிஸ்ஸலாமவர்களுக்கும், இஞ்ஜீல் வேதம் ஹஜ்றத் ஈஸா அலைவஹிஸ்ஸலாமவர்களுக்கும் அருளப்பட்டன என்று ஒவ்வொரு முஸ்லிமும் விசுவாசங் கொண்டிருக்கின்றனர். இவைகளை விசுவாசிக்காவிடில் எவரும் தம்மை முஸ்லிம் என்று சொல்லிக்கொள்ள அருகதையுள்ளவரல்லர். ஆகவே, இவ்வேதங்கள் எந்தெந்த நபிமார்களுக்கு அருளப்பட்டனவோ அந்த நபிமார்களையும், அவ்வேதங்கள் அல்லாஹுத ஆலாவால் அருளப்பட்டவை என்பதையும் திருகுர்ஆனின் கட்டளைப்படி விசுவாசிப்பது மிகவும் அவசியமாகும். திருகுர்ஆன் மேலே சொல்லப்பட்ட மூன்று வேதங்களையும் புகழ்ந்திருக்கிறது. இவைகளை விசுவாசிக்க வேண்டுமென்று கட்டளையுமிட்டிருக்கிறது.

ஆனுல், தற்போது யூத கிறிஸ்துவர்களிடம் மேற்கண்ட பெயரால் இருந்துவரும் நூல்களின் அந்தஸ்தென்ன? அவைகள் மாற்றப்பட்டவைகள் என்று அவைகள் மீது குற்றம் சுமத்துவது எம்மட்டுக்குச் சரியானது? என்ற பிரச்சினை யுண்டாகிறது. தற்போது கிறிஸ்துவர்களிடம் மேற்கண்ட வேதாகமங்களது பெயரால் இருந்துவரும் நூல்களை விசுவாசிக்கும்படி அல்லாஹுதஆலா கட்டளையிடவுமில்லை; அவனது றஸூல் நாயகம் (ஸல்) அவர்கள் கட்டளையிடவுமில்லை; இவைகள் தவறானவைகளை விட்டுப் பாதுகாக்கப்பட்ட கிரந்தங்களல்ல என்று முடிவு கூறியதுமட்டுமில்லாமல் திருகுர்ஆனின் பல இடங்களிலும் இந்த நூல்கள் போலிக் கிரந்தங்கள் என்றும், திரித்துக் கூறப்பட்டனவை யென்றும், இம்மாதிரியான குற்றங்களை வேதக்காரர்கள் செய்ததால் அவர்கள் குற்றவாளிகள் என்றும் கண்டித்துக் கூறியுமிருக்கிறது.

"யூதர்களிற் சிலர் வார்த்தைகளை அதனுடைய இடங்களைவிட்டு அகற்றி விடுபவர்களாயுமிருக்கிறார்கள்."

"அவர்களில் நின்றும் ஒரு கூட்டத்தார் அல்லாஹ்வின் வாக்கியத்தைக் கேட்கின்றனர். பிறகு அதனை அவர்கள் உணர்ந்து கொண்டபின்—அவர்கள் தெரிந்துகொண்டே—அவர்கள் அதனை மாற்றுகின்றனர்."

"இவர்கள் வார்த்தைகளை அதனுடைய இடங்களைவிட்டு மாற்றி விடுகின்றனர். இன்னும் அவர்கள் தங்களுக்கு உபதேசிக்கப்பட்டதிலிருந்து ஒரு பெரும்பாகத்தை மறந்துவிட்டனர்" என்று அல்லாஹு சுப்ஹானஹுவதஆலா கூறி இருக்கிறான். மற்றொரு இடத்தில் யூதர்களின் குற்றங்களைப்பற்றிக் கூறுகையில், ஒரு பெரும் பயங்கரமான குற்றத்தை வெளியிட்டிருக்கிறான். அதாவது, "தங்களுடைய கைகளினுல் புத்தகத்தை எழுதுகின்றனர். பிறகு இதைக்கொண்டு அற்பக்கிரயத்தை வாங்குவதற்காக, இது அல்லாஹ்வினிடமிருந்து வந்துளது என்று கூறுகின்றனர். இப்படி எழுதுபவர்களுக்கு அனர்த்தமே. ஆகவே, அவர்களுடைய கை எழுதியதனுல் அவர்களுக்கு அனர்த்தமே. அவர்கள் சம்பாதிப்பதில் நின்றும் அவர்

களுக்கு அனர்த்தமேயாகும்." என்று கூறி இருக்கிறான். இந்த ஆயத்தானது இதற்கு முந்திய ஆயத்துகளைப்பற்றிப் பூரணமாக விபரித்துக் கூறிவிட்டது. வேதக்காரர்கள் தங்களது வேதங்களின் பொருள்களை மாற்றிக்கூறியது மட்டுமில்லாமல் பதங்களையும் கூட மாற்றியும் திரித்தும் கூறி இருக்கிறார்கள் என்பதையும், ஒவ்வொரு புத்தகங்களையும் தங்கள் கைப்பட எழுதிக்கொண்டு, இது அல்லாஹுதஆலாவினால் அருளப்பட்ட கிரந்தம் என்று கூறிக்கொண்டிருந்தனர் என்பதையும் தெளிவாக விளக்கிக் கூறி இருக்கிறான்.

" யூத கிறிஸ்துவர்கள் அல்லாஹுதஆலாவின் வேதங்களை மாற்றிவிட்டனர். அதில் பேதகம் செய்து விட்டனர். தங்களது கைகளினால் புத்தகங்களை எழுதிக்கொண்டு அற்ப கூலிக்காக இது அல்லாஹுதஆலாவினால் அருளப்பட்டது என்று கூறுகின்றனர்" என்பதாக ஹஜ்றத் இப்னு அப்பாஸ் (றலி.) அவர்கள் எழுதி இருக்கிறார்கள். (தப்ஸிர் கபீர்)

" அது (இஞ்ஜில்) அல்லாஹுத ஆலாவினிடமிருந்து வந்ததுமல்ல. இன்னும் அது எந்த நபியுடைய வாக்கியமுமில்லை என்பது ருஜுவாகிவிட்டது. மேலும் அது தப்பான கொள்கையுள்ள அறியாத மனிதனும், மதம் என்பதை விளையாட்டுக் கருவியாக மதிப்பவனுமானவன் மாற்றித் திருத்தியதாக இருக்கிறது" என்று இமாம் இப்னுஹஜர் (றஹ்.) அவர்கள் கூறி இருக்கிறார்கள், (அல்மிலல்வன்னஹ்லு-வால்யூம் 1, பக்கம் 129.)

வேத வசனங்களையும், வேதவியாக்யானிகளின் அபிப்பிராயங்களையும் மேலே எடுத்துக்காட்டியதன் நோக்கம் இந்தக் கிறிஸ்துவர்கள் தங்கள் தாவாவுக்கு ஆதாரமாகக் கொண்டுள்ள அதே திருகுர்ஆன், அந்தப்பழைய வேதாகமங்கள் மாற்றப்பட்டும் திருத்தப்பட்டும் போயின என்பதை வெளியிடுகிறது என்பதை ருஜுப்பிப்பதற்காகவேயாகும். அதாவது, முற்காலத்திலுள்ள நபிமார்களுக்கு அருளப்பட்ட அசல் வேதாகமங்கள் நேர் வழிகாட்டிகளாகவும் ஞானப் பிரகாசமாகவும் இருக்கின்றன என்பதில் எவ்விதச் சந்தேசமும் இல்லை. திருகுர்ஆன் இந்த அசல் வேதங்களைத்தான் ஊர்ஜிதம் செய்து ஆதரித்து ஒப்புக்கொண்டிருக்கிறது. ஆனால், யூதகிறிஸ்துவர்களில் தோன்றிய வழிகேடர்கள் தங்களது செல்வாக்கின் மேலீட்டால் அவைகளை அசல் அந்தஸ்திலிருக்கவிடவில்லை. அல்லாஹு தஆலாவின் வாக்கியத்துடன் மனிதர்களின் வாக்கியத்தையும் கலந்து ஒன்று சேர்த்து விட்டனர். இப்பொழுது அவைகளை வெவ்வேறாகப் பிரித்து எடுத்தக்காட்ட முடியாதவாறு அவ்வளவு பலமாகக் கலந்து விட்டன. ஆகவே, திருகுர்ஆன், அவைகள் திரித்தியும் புரட்டியும் கூறப்பட்டிருக்கின்றன; மாற்றப்பட்டிருக்கின்றன என்பதை வெளியிட்டும் இந்த தவறுதல்களைச்செய்த குற்றவாளிகள் வேதக்காரர்கள்தான் என்று கூறியிருக்கிறது. வேதக்காரர்கள் தங்களதுவேதம் சிறந்ததுஎன்பதற்கும், அதனை மதித்து நடக்கவேண்டும் என்பதற்கும் திருகுர்ஆனை ஆதாரமாகக் காட்டுகின்றனர். ஆகவே, அவர்களுக்கு திருகுர்ஆனின்மீது உண்மையானபக்தியும் விசுவாசமும் இருக்குமாயின், அவர்கள் கையில் அந்த வேதங்களின் பெயரால் இருந்துவரும் கிரந்தங்களில் திரித்தலும் புரட்டலும் புகுந்துவிட்டன என்பதையும், அவ்வேதக்காரர்களே அப்படிச் செய்திருக்கிறார்கள் என்பதையும் அதே திருகுர்ஆன்தான் அறிவித்திருக்கிறது. ஆதலின், இதனையும் அவ்வேதக்காரர்கள் முன்பின் யோசனையின்றி ஒப்புக்கொள்ளல் வேண்டும். ஆனால், அவர்கள் அப்படிஒப்புக்கொள்வதில்லை. திருகுர்ஆனில் தங்களது நோக்கத்திற்கு சாதகமானவைகளேபோல் தோன்றுகிற சில பாகங்களை அவர்கள் விசுவாசிப்பதும், தங்களுக்கு விரோதமானவைகளேபோல் தோன்றுகிற சில பாகங்களை ஒப்புக்கொள்ளாமலும் விசுவாசியாமலும் இருப்பதும் ஏன்? என்று அவர்களை வினவுகின்றோம். இது விவாதமுறைக்கு சரியான ஒழுங்காமோ? என்பதை அவர்கள் சிந்திக்கட்டும். (தொடரும்)

---

## அன்பர்கட்கு.

1934-ம் வருடத்தில் சந்தாதாரர்களாய்ச் சேர்ந்தவர்களின் சந்தா முடிவடைந்துவிட்டதால் நடைபெறும் வருடத்திற்குரிய சந்தா துகையை அனுப்பிவைக்குமாறு கோருகிறோம்.

# தாழ்த்தப்பட்ட வகுப்பாரின் மதமாற்றம்

தாழ்த்தப்பட்ட வகுப்பாரின் தலைவரும், காந்திஜீயுடன் தாழ்ந்த வகுப்பாருக்காக சில வருஷங்களுக்குமுன்பு பூனாவில் ஒப்பந்தம் செய்து, பிரிட்டிஷ் பிரதம மந்திரி மிஸ்டர் ராம்ஸேமாக்டனால்டின் வகுப்புத் தீர்ப்பை தாழ்த்தப்பட்டோரைப் பொறுத்த வரையில் மாற்றும்படிச் செய்தவருமான ஸ்ரீமான் டாக்டர் அம்பெத்கார் நாஜிக் ஜில்லாவில் நடைபெற்ற தாழ்ந்த வகுப்பார் கான்பரன்சில் செய்த உருக்கமான பிரசங்கமும், தாழ்ந்த வகுப்பார் தங்களது முன்னேற்றத்திற்காக ஹிந்து மதத்தை விட்டுப் பிறிந்து வேறுமதம் புக வேண்டுமென்று அம்மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானமும் இந்தியாவில் ஒருபெரும் மாறுதலையும்உற்சாகத்தையும் தூண்டிவிட்டிருக்கிறது. இதனால் பெரும் பெரும் விவாதங்களும் கிளர்ச்சிகளும் தோன்றி இருக்கின்றன. பத்திரிகைகளில் இது சம்மந்தமாகப் பல தலையங்கங்களும், வியாசங்களும் பிரசுரமாகி இருக்கின்றன. காங்கிரஸ் தலைவர்கள், மிதவாதத் தலைவர்கள், சமூகத் தலைவர்கள் உள்பட இந்தியத் தலைவர்கள் இப்பிரசினை சம்மந்தமான தங்கள் அபிப்பிராயங்களைத் தெரிவித்து வருகின்றனர்.

ஆரிய சமாஜிகள், ஹிந்து மகாசபையினர், புத்தமதத்தார், சீக்கியர் ஆகியவர்கள் ஸ்ரீமான் டாக்டர் அவர்களுக்கு அழைப்புகளையும் தூதுக்கோஷ்டியினரையும் அனுப்பி தங்கள் மதத்தைத் தழுவிக்கொள்ளுமாறு வேண்டிக்கொள்கின்றனர். ஹரிஜன ஊழியம், தீண்டாமை விலக்கு ஆகிய இயக்கங்களை நேற்றுவரை பரிகசித்துக்கொண்டும், கேலிசெய்து கொண்டும், தீண்டாதார்களுக்கு ஆலயப் பிரவேச உரிமையை அளிக்க மறுத்துக்கொண்டும் இருந்த உயர்ந்த உயர்வகுப்பு ஹிந்துக்களும்கூட தாழ்த்தப்பட்ட வகுப்பார்பால் அன்பு செலுத்தவும் பக்ஷம் பாராட்டவும் தலைப்பட்டுவிட்டனர். "நீங்கள் ஏன் ஹிந்துமதத்தைவிட்டு விலகுகிறீர்கள்; சகோதரர்களுடன் கோபித்துக்கொண்டு தங்களுடைய பூர்வீக தர்மத்தை விட்டுவிடலாமா" என்றும் கூறுகின்றனர். சமத்துவ உரிமைக்காகவும், சுயமரியாதைக்காகவும் உழைத்துவரும் பல இயக்கத்தாரும் தென்னிந்தியாவிலிருந்தும் வட இந்தியாவிலிருந்தும் ஸ்ரீமான் டாக்டர் அவர்களை ஆதரித்துத் தந்திகளும் தபால்களும் அனுப்பி அவரை உற்சாகமூட்டி வருகின்றனர். சுருங்கக் கூறுமிடத்து, இப்பொழுது இந்தியா தேசமெங்கும் தாழ்த்தப்பட்டோர் மதம்மாறும் விஷயமே சிறியோர், பெரியோர், வைதீகர், லௌகீகர் ஆகிய சகலரிடத்திலும் பேச்சாக இருந்து வருகிறது. இத்தாலி அபிசினியா யுத்தத்தைப்பற்றி ஜனங்கள் எவ்வளவு ஆர்வமாகப் பத்திரிகைகளைப் பார்த்து வருகிறார்களோ அவ்வளவு ஆர்வமாக ஸ்ரீமான் டாக்டர் அவர்களின் இந்தப் பிரசினையைப்பற்றி பத்திரிகைகளில் வெளியாகும் வியாசங்களையும் பார்த்து வருகிறார்கள் என்று கூறலாம்.

### ஆக்ஷேபனைகள்

ஒரு பக்கம் மேலே கண்டவாறு அழைப்புகள் அனுப்பப்பட்டும், அமுதமொழிகள் கூறப்பட்டாலும், நாஜிக் ஜில்லா தாழ்த்தப்பட்டோர் கான்பரன்சு ஒரு வெடிக்குண்டைப்போலிருப்பதால் ஹிந்து ஜாதியினர் அனைவருக்கும் இது பரபரப்பையுண்டாக்கி இருக்கிறது. சென்னையிலிருந்து லாகூர்வரை இதனைப்பற்றிய விவாதங்களும் ஆக்ஷேபனைகளும், தர்க்கங்களும் கண்டனங்களும் பலமாகச் செய்யப்பட்டு வருகின்றன. ஹிந்துக்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பாருக்கு இனிமேல் 10-20 வருஷகால தவணைக்குள்ளேனும் சம உரிமை அளிப்பதாக உறுதி கூறுவார்களா என்று நம்புவதற்கு இவ்விவாதங்களிலிருந்து ஏதேனும் இடமிருப்பதாகத் தோன்றவில்லை. ஸ்ரீமான் மதுரதால்விலன் தாஸ் என்பவர் இது சம்மந்தமாக காந்திஜீயின் அபிப்பிராயத்தை ஆதரித்து "பலநூற்றாண்டுகளாக இருந்துவந்த ஒரு வழக்கத்தைச் சில தினங்களுக்குள் எங்ஙனம் மாற்றமுடியும்?" என்று அபிப்பிராயம் தெரிவித்துள்ளார். மற்றொருவர் "டாக்டர் அம்பெத்கார் எப்பொழுதும் இஸ்லாம் மதத்தின் சிறப்புகளைப்பற்றிப் புகழ்ந்து அதன்மேல் ஆர்வங்கொண்டவர்தான்;

இந்த கான்பரன்சு தாழ்த்தப்பட்டோர்களின் பிரதிநிதித்துவம் வாய்ந்த கான்பரன்சு அல்ல'' என்று கூறி இருக்கிறார். மற்றொருவர் காந்திஜீக்கு இந்தத் தீர்மான சம்மந்தமாக கடிதம் எழுதி இதைப்பற்றி தமது வெறுப்பை வெளியிட்டிருக்கிறார். கடைசியாக தமிழ்நாட்டிலுள்ள பிரபல தலைவர் ஒருவர்-இவர் பிராமண வகுப்பைச் சேர்ந்தவர் - "மதம் மாறுவதால் எவ்விதப் பிரயோஜனமும் விளையப்போவதில்லை; இவ்வாறு செய்வதால் தற்போதிருக்கிற தாழ்த்தப்பட்டோரின் ஜனத்தொகை குறைந்துவிடும்; இதனால் அநீதிசெய்கிற உயர் வகுப்பார் தைரியங்கொண்டு இன்னும் அதிகமாக அநீதி செய்வர்.'' என்று கூறி இருக்கிறார்.

## ஆரிய சமாஜிகள்

இந்தச் சமயத்தில் ஆரிய சமாஜிகள் மௌனமாக இருக்கமுடியுமா? அவர்கள் இந்தியாவிலுள்ள எல்லா சமூகத்தாரையும் சுத்தி செய்து ஹிந்து மதத்தில் சேர்க்க விரும்புபவர்களல்லவா? இப்படிப்பட்ட மனப்பான்மை யுள்ளவர்களுக்கு ஸ்ரீமான் டாக்டர் அவர்களது பிரசங்கமும், நாஸிக் ஜில்லா தாழ்த்தப்பட்டோர் கான்பரன்சுத் தீர்மானமும் சந்தோஷத்தைக் கொடுக்குமா? இது அவர்களது பிரயத்தனத்திற்கும் இயக்கத்திற்கும் சரியான சவுக்கடியன்றோ? ஹிந்துக்களின் ஜனத்தொகையை அதிகமாகக் காட்டுவதைத் தவிர இவர்களுக்கு வேறு பிரதான நோக்கமில்லை யாதலின், இந்தத் தீர்மானம் இதற்கு நேர்மாறாக இருப்பதால் அவர்களுக்கும் கோபமுண்டாகி விட்டது. இவ்வியக்கத்தாருக்கு லாகூரில் பிரசுரமாகும் "மிலாப்", "பிரதாப்" பத்திரிகைகள் பிரதான அந்தஸ்திலுள்ளனவாக இருப்பதால் இவைகள் மௌனமாக இருக்க முடியுமா? இவைகளும் தம்முடைய அபிப்பிராயங்களைத் தெரிவித்திருக்கின்றன.

இப்பத்திரிகைகள் டாக்டர் அம்பெத்காரின் இவ்வபிப்பிராயத்திற்கு அனுதாபம் வாயளவில் காட்டி, தாழ்த்தப்பட்டோரின் கஷ்டங்களுக்காக நீலிக் கண்ணீர் வடித்திருப்பதுடன் காந்திஜீயின் அபிப்பிராயத்தையே ஆதரித்து எழுதி இருக்கின்றன.

அவைகளில் ஒரு பத்திரிகை ஷை மதம் மாறும் பிரச்சினையைப் பற்றிப் பிரயோஜனமற்ற விதமாகப்பதில் கூறி இருக்கின்றது. "உலக விஷயங்களைக் கவனிக்குமிடத்து டாக்டர் அம்பேத்கார் உயர்ந்த அந்தஸ்திலிருப்பதால் அவருக்கு இதனால் என்ன கஷ்டம் உண்டாகிவிட்டது'' என்று வாதம் செய்கின்றது. அதாவது டாக்டர் அம்பேத்கார் சகல பாக்கியங்களையும் அனுபவித்துக் கொண்டிருப்பதால் அவர் தமது சகோதரர்கள் இழிவுபடுத்தப்படுவதைப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும் என்று பொருள்படும்படி எழுதி இருக்கின்றது.

மற்றொரு பத்திரிகை "டாக்டர் அம்பேத்காரின் அபிப்பிராயங்கள் விஷமத்தனத்தை அஸ்திவாரமாகக் கொண்டது, பாபம் கலந்தது'' என்று கூறிவிட்டு சமத்துவ உரிமை அளிப்பதானது திறமையைப் பொறுத்திருக்கிறது என்றும், தென்னிந்தியாவிலுள்ள பிராமணர்களுக் கேற்பட்டிருக்கும் மேன்மை அவர்களது திறமையின் பலனேயாகும்; தாழ்த்தப்பட்டோருக்கு சமத்துவம் என்பதற்கு என்ன அர்த்தம் என்பதுகூடத் தெரியாது என்றும் எழுதிவிட்டு, மதம் மாறுபவர்கள் பாபிகளாவார்கள் என்று முடிவுகூறி இருக்கிறது. அதாவது, ஒருவர் தமது மதத்திலுள்ள தீமைகளையும், மூடக்கொள்கைகளையும் கண்டு அந்த மதத்தைவிட்டு விலகிவிட்டால் அவர் பாவியாகி விடுகிறார் என்பதும், அவர் இவ்விஷயத்தைத் தெரிந்துகொண்டே அந்த மதத்திலிருந்து கொண்டிருந்தால் அவர் வீரர் என்றும் அப்பத்திரிகை கருதி இருக்கிறது போலும். இறுதியாக இந்த ஆரிய சமாஜிகளும் கூட, தீண்டாமையை ஒழிக்க பல நூற்றாண்டுகள் செல்லும் என்று கூறுவதுதான் மிகவும் விநோதமாக இருக்கிறது. ஆயினும், தாழ்த்தப்பட்ட மக்களின் மனத்திலிருக்கும் மனவேதனையும் துக்கமும், பல நூற்றாண்டுகளென்ன, பலநாட்கள் செல்வதைக்கூடச் சகிக்கமாட்டார்கள் என்பதை இவர்கள் அறியாதுபோனது வருந்தத்தக்க விஷயமாகும்.

## அழைப்புகள்

இவ்வாறு ஸ்ரீமான் டாக்டரின் செயலைக்கண்டு சீற்றங்கொண்டு ஆக்ஷேபனைகள் செய்பவர்களின் நிலைமையானது பரிதவிக்கத் தகுந்ததாகவும் இரக்கங்காட்ட லாயக்குள்ளதாகவும் இருக்கிறது. இவர்கள் மதம் மாறுவதன் கருத்து, நோக்கம் ஆகியவைகளை அறியாதவர்களாகவும், மதம் எதற்காக ஏற்பட்டது? அதன் அந்தரங்கம் என்ன? ஆகியவைகளை உணராதவர்களாகவும், தாழ்த்தப்பட்ட மக்களின் வருந்தத்தக்க நிலைமையைப்பற்றிக் கொஞ்சமும் சிரத்தை யில்லாதவர்களாகவும் இருக்கிறார்கள்.



இதில் மிகவும் ஆச்சரியமானதும் நகைப்புக்கிடமானதுமான விஷயம், இவர்கள் தாழ்த்தப்பட்ட மக்கள் தேடும் பரிகாரத்தைச் செய்ய இயலாதவர்களாக இருந்து கொண்டிருக்கும் நிலைமையில் தாழ்த்தப்பட்ட மக்கள் துடித்துக் கொண்டிருப்பதைப் பார்த்து தங்கள் மதத்தைத் தழுவிக் கொள்ளும்படி அழைப்புகள் அனுப்புவதே யாகும். சர்தார் துலிப்சிங் என்பவர் "தாழ்த்தப்பட்ட மக்களே! வாருங்கள்!! சீக்கிய தர்மத்தில் சேர்ந்து கொள்ளுங்கள்; இம்மதம் ஏக தெய்வக்கொள்கையையும் சமத்துவத்தையும் தாங்கி நிற்கிறது'' என்று கூறுகிறார். ஆரிய சமாஜிகள் தாழ்த்தப்பட்டோரை நோக்கி "எங்களிடம் வந்துவிடுங்கள்; நாங்கள் உங்களை மார்போடணைத்துக் கொள்கிறோம்'' என்கின்றனர்.

ஆனால், தாழ்த்தப்பட்ட மக்கள் கேட்கின்ற வஸ்து இவ்விரு சாராரின் கடைகளிலுமில்லை. இவ்வஸ்து இல்லாமல் இருக்கிறது என்பது மட்டுமில்லை; தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஏற்பட்ட இந்த விசாரத்திற்குக் காரணமாகவுள்ள தீண்டாமையும், குலம், வகுப்பு நிறம் ஆகிய வேற்றுமைகளும் இவர்களில் நிறைந்திருக்கின்றன. சீக்கியர்களாயினும் சரி அல்லது ஆரிய சமாஜிகளாயினும் சரி, அல்லது ஹிந்து மதத்திலுள்ள பழைய பிரிவினராயினும் சரி அல்லது புதிய பிரிவினராயினும் சரி எல்லாரிடத்திலும் தீண்டாமையும், உயர்வு தாழ்வு என்ற வேற்றுமையும் நிறைந்திருக்கின்றன.

இவ்வாறு இவர்களிடம் ஏதேனும் ஒருவகையில் தீண்டாமையும் வகுப்பு வேற்றுமையும் இருந்துகொண்டே தானிருக்கிறது. எனவே, எச்சமூகத்தின் மதக்கொள்கை குலவேற்றுமையாலும் நிறைவேற்றுமையாலும் பீடிக்கப்பட்டிருக்கிறதோ அச்சமூகத்தாரால் தீண்டப்படாதவர்களுக்கு என்ன நன்மையுண்டாக முடியும்? அதிலும், முக்கியமாக தங்களை ஹிந்து மதத்தின் ஒரு பிரிவினர் என்று கருதிக்கொண்டிருக்கும் போது ஏழைகளான தாழ்த்தப்பட்ட மக்கள் ஆரிய சமாஜிகளாகியோ அல்லது சீக்கியர்களாகியோ உண்மையான சமத்துவத்தை அவர்கள் எங்ஙனம் அடையப்போகிறார்கள்? பழைய ஹிந்துக்களிடம் இவர்கள் எந்நிலைமையிலும் தாழ்ந்த மக்களாகவும் தீண்டத்தகாதவர்களாகவுமன்றோ இருப்பர்! ஆகவே, தாழ்த்தப்பட்ட மக்கள் தங்களுக்கு ஏற்பட்டுள்ள இந்த விசாரத்தை முற்றிலும் தீர்த்துக்கொண்டு சம அந்தஸ்தை அடைய வேண்டுமாயின் அவர்கள் ஹிந்துமத மனப்பான்மை கொண்ட எந்தப் பிரிவிலும் சேராமல் அவைகளைவிட்டு முற்றிலும் ஒதுங்கி இஸ்லாம் மதம், கிறிஸ்து மதம் போன்ற வேறு ஒரு மதத்தையே அவர்கள் தழுவிக் கொள்ளல் வேண்டும்.

## கிறிஸ்துமத அழைப்பு

கிறிஸ்து மதத்தின் சார்பாக, தாழ்த்தப்பட்ட இம்மக்களுக்கு அழைப்பு விடுக்கப்பட்டதா? இல்லையா என்பது நமக்குத் தெரியாது. அம்மதத்தின் சார்பாக அவர்களுக்கு அழைப்பு விடுக்கப்பட்டிருக்குமாயின் அது ஒரு பரிகாசமாக இருக்குமே யல்லாமல் வேறொன்றுமில்லை. கிறிஸ்து மதத்தில் தீண்டாமை என்பது இல்லை என்பதிற் சந்தேகமில்லை. ஆனால், அவர்களிடம் நிற வேற்றுமை மிக ஆழமாகப் பதிந்திருக்கிறது. இது தீண்டாமையைப் பார்க்கினும் மிகப் பெரியதாகும்; இதற்குப் பரிகாரமுமில்லை; இது மிகவும் வெறுக்கத்தக்க விஷயமுமாகும். இத்துடன் மட்டும் நில்லாமல் இந்தியாவில் கிறிஸ்துமதத்தைத் தழுவியவர்களுக்குள்ளும் பள்ளக் கிறிஸ்துவர், பறையக் கிறிஸ்துவர், முதலிக் கிறிஸ்துவர் நாயுடுக் கிறிஸ்துவர், பிள்ளைக் கிறிஸ்துவர், பிராமணக் கிறிஸ்துவர் என்னும் பாகுபாடு செய்து, மாதாகோவில்களில் இவர்களுக்கு இடம் ஒதுக்கப்படுவதால் தமிழ்நாட்டிலுள்ள சில மாதாகோவில்களில் கலகமும் குழப்பமும் சிறிது காலத்திற்குமுன்னுண்டானது யாவருக்கும் தெரியாத விஷயமன்று.

தவிரவும் குலவேற்றுமை காண்பிப்பது நிற வேற்றுமையைப் பார்க்கினும் கொஞ்சங்குறைந்தது என்று கூறலாம். ஒருவர் பள்ளக்கிறிஸ்துவரா? பறையக் கிறிஸ்துவரா? நாயர் கிறிஸ்துவரா? நாயுடுக் கிறிஸ்துவரா? பிள்ளைக் கிறிஸ்துவரா? பிராமணக் கிறிஸ்துவரா? என்று நெற்றியில் எழுதப்பட்டில்லை. மேலும்

தீண்டாமையைப் போக்கிக் கொள்வதற்காக கிறிஸ்துமதத்தைத் தழுவிய ஒரு தீண்டாதார் மற்றவர்களிடம் சென்று "யான் பள்ளக் கிறிஸ்துவன் அல்லது பறையக் கிறிஸ்துவன் அல்லது சக்கிலியக் கிறிஸ்துவன்" என்று வலியக் கூறி தனக்கென வேறு ஒரு இடத்தைத் தேடிக்கொள்ள மாட்டான். உள்ளூரில் அவரை மற்றவர்கள் தெரிந்திருப்பதால் உயர்வு தாழ்வு என்ற குலவேற்றுமைக்கு உட்படுத்த முடியும். வெளியூரில் அவ்வாறு உட்படுத்துவதற்கு முடியாது. ஏனெனில், அந்தப் பள்ளக்கிறிஸ்துவரின் நெற்றியில் "இவர் பள்ளக்கிறிஸ்துவர்" என்று எழுதப்பட்டில்லை. எனவே, திருநெல்வேலியிலுள்ள ஒரு பள்ளக் கிறிஸ்துவர் சென்னையிலுள்ள மாதா கோவிலுக்கு வந்து, தன்னை பள்ளக் கிறிஸ்துவர் என்று சொல்லிக் கொள்ளாமல் பிராமணக் கிறிஸ்துவருடனும், பிள்ளைக் கிறிஸ்துவருடனும் தோளோடு தோள் சேர்த்து நின்று கொள்ளமுடியும். ஆதலால், கிறிஸ்து மதத்தில் இந்தக் குலபேதம் அவ்வளவு பலமாக இல்லை.

ஆனால், நிறபேதம் அவ்வாறன்று. இந்தியக் கிறிஸ்துவருக்கும் ஐரோப்பிய கிறிஸ்துவருக்குமிடையில் அவரவர் எந்த தேசத்தைச் சேர்ந்தவர் என்ற பாகுபாடு அவர்களது நிறத்திலும் நெற்றியிலும் நன்கு எழுதப்பட்டிருக்கின்றது. இந்தியக் கிறிஸ்துவர் தன்னை ஐரோப்பியக் கிறிஸ்துவராகக் கூறி மற்றவரை ஒருபோதும் ஏமாற்றவே முடியாது. ஐரோப்பியக் கிறிஸ்துவர் தன்னை இந்தியக்கிறிஸ்துவர் என்று கூறிக்கொள்ள ஒருபோதும் முன்வரவும் மாட்டார். உலகத்திலுள்ள எந்த விஷயமும் இந்நிற வித்தியாசத்தை ஒழிக்கவே முடியாது. ஆகவே, கருப்பருக்கொரு மாதாகோவில், வெள்ளையருக்கொரு மாதாகோவில், கருப்பர் பள்ளிக்கூடம்வேறு, வெள்ளையர் பள்ளிக்கூடம் வேறு,கருப்பருடைய சொஸைட்டிவேறு,வெள்ளையர் சோஸைட்டிவேறு, கருப்பருடையசொஸைட்டியில் வெள்ளையர்சேருவதில்லை,வெள்ளையருடையசொஸைட்டில் கருப்பர்சேரமுடியாது எனவே, இவ்விரு வர்ணத்தாருடைய மத சம்மந்தமானவும், வாழ்க்கை சம்மந்தமானவுமான சபைகளும் மற்றவைகளும் வெவ்வேறாகவே இருக்கின்றன. இதில் பரிகாரம் செய்வதற்கு இடமில்லை என்பதற்குக் காரணம் வெண்ணிற கிறிஸ்துவருக்கு ராஜீய உயர்வு இருக்கிறது. அதாவது வெள்ளைக் கிறிஸ்துவர் ஆளுபவராகவும், கருப்புக் கிறிஸ்துவர் ஆளப்படுபவராகவும் இருக்கின்றனர்.

இவ்விருவரும் கிறிஸ்துவர்களாக இருந்தால் இருக்கட்டும், ஆனால், ஒன்று கிழக்காகவும்மற்றொன்று மேற்காகவும் இருக்கிறது. ஒரு கிறிஸ்துவ நாவலாசிரியர் கூறி இருப்பதுபோல் இவ்விருவரும் ஒன்றுசேரவே முடியாது. எனவே, ஹிந்துமதத்தில் இருந்து கிறிஸ்துவ மதத்தைத் தழுவுவது என்பது வானத்திலிருந்து விழுந்து பேரீத்தமரத்தில் போய் மோதிக்கொள்வது" என்ற பழமொழிக்கொப்பாகவே இருக்கிறது. எனவே, படித்த தீண்டாதார், விஷயஞான முணர்ந்த தாழ்த்தப்பட்ட வகுப்பினர் எவரும் இந்த அறியாமையில் சிக்கிக்கொள்ள மாட்டார்.

அன்னோ! தீண்டாதார்களைத் தங்கள் மதத்தில் சேர்ந்து கொள்ளும்படி அழைப்புகள் விடுத்திருப்பவர்கள் தீண்டாதார்களின் விசாரத்தையும் முறையீடுகளையும் பற்றிக் கவனம் செலுத்த முன்வந்திருப்பதாகத் தெரியவில்லை. "மதத்தை மாற்றிக்கொள்வதற்குமுன் எங்களது மதத்தைப்பற்றியும் ஒருமுறை ஆராய்ந்து பாருங்கள் என்று சீக்கியர்கள் கூறிக்கொண்டிருக்கின்றனர். "எங்களது தீண்டாமை ஊழியத்தையும் கொஞ்சங் கவனியுங்கள்" என்று ஆரிய சமாஜிகள் கூறுகின்றனர். நாளைக் கிறிஸ்துவர்களும் "தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசித்து விடுங்கள்" என்று கூறுவர். ஆனால், இதுவரை கொள்கையில் மட்டுமிருந்து வந்த தீண்டாமை என்ற பேதகம் இனி கிரியாம்சையிலும் வந்துவிடும்.

இன்னமும் அவர்கள் பிறமதங்களின் போதனைகளைப்பற்றி படித்துணர ஆரம்பிக்கவில்லை. மதசம்மந்தமான புத்தகங்களைப்படித்ததனால் மாத்திரம் மதத்தைப் பற்றிக்கொள்ள முன்வந்தவர் மிகச் சிலரே யாவர். மதத்தைப் பற்றி முடிவு செய்வதற்குப் பெரும்பாலும் அந்த மதத்திலுள்ள ஜனங்களின் நடத்தையைக் கவனிப்பதே மிகவும் முக்கியமாக இருந்து வருகிறது. மதத்தின் போதனையைப்பற்றிக் கவனஞ் செலுத்துபவர் தாங்களாக ஒருமுடிவு செய்துகொள்ளச்சக்திவாய்ந்த கல்வியாளராகவே இருப்பர்.

## தீண்டாதார் முஸ்லிம்களாகுதல்

ஸ்ரீமான் டாக்டர் அம்பெத்காரின் பிரசங்கத்தையும், நாஸிக் கான்பரன்ஸ் தீர்மானத்



தையும், சில ஹிந்துக்கள் அவசரப்பட்ட தீர்மானமென்றும், குறுகிய நோக்கமுள்ள பிரசங்கமென்றும் கூறிடினும் உண்மை விஷயத்தைக் கூறக்கூடிய சில ஹிந்துக்களும் இல்லாமலில்லை. "தீண்டாதார் கூறுவது சரிதான்; நான் தீண்டாதானாய் இருந்திருப்பின் எப்பொழுதே ஹிந்து மதத்தைக் கைகழுவி விட்டிருப்பேன்" என்று பம்பாயிலுள்ள ஒரு பிரபல ஹிந்து அபிப்பிராயம் கூறிவிட்டு அவர்களுக்கு மிகவும் மதிக்கத்தக்க விதமான ஆலோசனையும் கூறி இருக்கிறார். "எந்த மதத்தில் நீங்கள் சேர விரும்புகிறீர்களோ அந்த மதத்தில் உங்களுக்குப் பூரணமான சமத்துவம் கிடைக்கிறதா இல்லையா?" என்பதை நீங்கள் முதலிலேயே நன்கு ஆலோசனை செய்து கொள்ளவேண்டும் என்றும் அவர்களுக்கு அவர் அறிவித்துள்ளார்.

டாக்டர் ஹரிசிங்கவர் என்பவர் இன்னும் மிக நன்றாக அபிப்பிராயங் கூறி இருக்கிறார். அவர் கூறிய அபிப்பிராயம் வருமாறு:—

"தீண்டாதார்கள் ஹிந்து மதத்தில் இருந்து கொண்டே எந்தக் காலத்திலேனும் சமத்துவத்தைப் பூரணமாக அனுபவிப்பார்களா என்பது எனக்குச் சந்தேகம்தான். இந்த மதம், குலம், வாழ்க்கை ஆகியவைகளில் உயர்வு தாழ்வு பிராமணர்களுக்கு அடிமைத்தனம் செய்தல் ஆகியவைகளைக் கொண்ட மதமாக இருக்கிறது."

ஹிந்து மதம் இவ்வுலகம் முடியும்வரை அல்லது குறைந்தபக்ஷம் ஒரு நீண்ட காலத்திற்கு தீண்டாதாருக்கு சமத்துவம் கொடுக்கப்பட மாட்டாது என்பதே இவ்வபிப்பிராயத்தின் சாராம்சமாகும். சமத்துவ உரிமையை அளிக்கும்போது ஹிந்து மதம் இருக்கமாட்டாது. ஆகவே, பம்பாய் பிரபலஸ்தர் கூறியதற்கேற்ப தீண்டாதார் எந்த மதத்தைத் தழுவவேண்டும் என்று அவர்கள் நன்கு ஆலோசனை செய்து கொள்வதே சிறந்ததாகும்.

தீண்டாதார்கள் ஹிந்து மதத்தை வெறுக்காமல் அந்த மத சம்பந்தமான வர்க்கத்தாரின் மீதே குறை கூறுகிறார்களாதலின் அவர்கள் அந்த வர்க்கத்தாரைவிட்டு மாத்திரம் விலகிக் கொள்ளவே விரும்புகிறார்கள். இவ்வாறு விட்டுப் பிரிவதற்காக ஹிந்து மதத்தைவிட்டு விலகிக்கொள்ள விரும்புகின்றனர். அவர்களுடைய இந்த நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக இஸ்லாம் மதத்தையும் முஸ்லிம் சமூகத்தையும் தவிர அவர்களுக்குத் தக்க ஒளஷதம் வேறொன்றுமில்லை. இதற்கிடையே "மிலாப்"பத்திரிகை இஸ்லாத்தின்பிரகாசமான முகத்தை மாசுள்ளதாக ஆக்குவதற்கு, காதியானிகளுக்கும் முஸ்லிம்களுக்கு மிடையிலுள்ள பிணக்கை சமிக்ஞை செய்து எழுதியிருக்கிறது. இந்தப் பிணக்கு மதக்கொள்கை சம்பந்தமான பிணக்கேயன்றி வாழ்க்கை முறையிலும் குலத்திலும் உயர்வு தாழ்வு என்பதைப்பற்றிய பிணக்கன்று. தனிப்பட்ட முறையில் எந்த முஸ்லிமும் சரி, எந்தெக்காதியானியும் சரி ஒருவன் மற்றொருவனைத் தீண்டத்தகாதவன் என்றோ, கண்ணில் பட்டுவிட்டால் தீட்டு உண்டாகிவிடும் என்றோ கருதுவதும் இல்லை. இது போலவே, மனிதனாகப் பிறந்த எவனையும் இப்படிக் கருதுவதில்லை. ஆகவே, தீண்டாதாருக்குள்ள பிணக்கும், மனவருத்தமும் மதக்கொள்கையைப் பொருத்ததன்று. சமூகத்திற்குள் வேற்றுமை செய்வதையும், தங்களைக் கீழ்த்தரமாக மதித்து நடத்துவதையும் தான் அவர்கள் ஆக்ஷேபனைசெய்கின்றனர். இம்மாதிரி அவர்களை அவர்களது சமூகத்தார் நடத்துவது மிருகத்திலும் கூடக் கேவலமான நிலைமைக்குக் கொண்டு வந்துவிட்டது.

டாக்டர் அம்பெத்கார் மதமாறுவது சம்பந்தமாக தீர்மானம் நிறைவேற்றிய பின்னர் ஏனை வகுப்பினர் அவருக்கு அழைப்பு விடுத்தது போலவே முஸ்லிம்களும் அழைப்பு விடுத்திருக்கிறார்கள். இதுசம்பந்தமாக அழைப்பு விடுக்கும் விஷயத்தில் ஜனாப் காலித்லத்தீப் கௌபா ஒரு நௌமுஸ்லிம் என்ற முறையில். இஸ்லாம் மதத்தில் அவர்களை வந்துவிடும்படி அழைத்து, இஸ்லாம் மதத்தை அவர்களுக்குச் சமர்ப்பிக்கும் விஷயத்தில், எல்லாரைப் பார்க்கினும் மிகவும் அதிகமாக அருகதை யுள்ளவராக இருக்கிறார். ஆகவே, அவர் டாக்டர் அம்பெத்காரை பதாயூன் வரும்படி அழைத்தார். அப்பால் அவரை நேரில் சென்று காண்பதாகவும் முடிவுசெய்துகொண்டார். முஸ்லிம் பத்திரிகைகளும் தீண்டாதார்களை நோக்கி "இஸ்லாத்தின் தலைவாசல்கள் உங்களுக்காக எப்பொழுதும் திறந்து வைக்கப்பட்டிருக்கின்றன" என்று எழுதிவருகின்றன.

## சமூகவாரி முறையில் அழைப்பு விடுக்கவேண்டும்.

எனவே, தீண்டாதார்களை இஸ்லாத்தில் சேர்ந்துகொள்ளும்படி அழைக்கிற இவ்விஷயம்

தனிப்பட்டமுறையில் நடைபெறலாகாது. இந்தியாவிலுள்ள எல்லா இஸ்லாமிய சங்கங்களின் சார்பாக "அழைப்புப் பத்திரிகை" தயார் செய்து, அதில் எல்லாத் தலைவர்களும், பிரபலஸ்தர்களும் கையொப்பமிட வேண்டும். தென்னிந்தியாவில் இப்பத்திரிகையை ஏராளமாகப் பங்கிடவேண்டும். தவிரவும் இக்காரியத்தை தென்னிந்தியா வாசிகள் மிகவும் சீரிய முறையில் நிறைவேற்ற முடியும்.

ஆகவே, நாம் தனிப்பட்ட முறையில் பலரும் தீண்டாதாருக்கு அழைப்பு விடுப்பதை சரியான முறையென்று கருதவில்லை. இம்மாதரியாக அழைப்பு விடுப்பதை இதர சமூகத்திலுள்ள தனிப்பட்ட நபர்களும் செய்ய முடியும். ஆனால், அவர்கள் எல்லோரும் ஏக மனதாகக் கூடி தங்கள் சமூகத்தின் சார்பாக ஐக்கிய அழைப்பு விடுத்து அச்சமூகத்தினர் அனைவருமே தீண்டாதார்களைச் சமத்துவமாக நடத்த அவர்களால் முடியாது. ஆதலின், முஸ்லிம் சமூகத்தின் சார்பாக முஸ்லிம்களின் பிரதிநிதிகள் இவ்வழைப்பை விடுக்க வேண்டும். இம்மாதிரியான அழைப்பை விடுப்பது முஸ்லிம்களால் மட்டிலும்தான் முடியும்; மற்றவர்களால் முடியாது. ஆதலால், இதனைத்தான் முஸ்லிம்கள் செய்வது அவசியம். இது சம்பந்தமாகக் கூடிய சீக்கிரத்தில் "டில்லி மாகாண ஜமிய்யத்துல் உலமா" டில்லியில் ஒரு மகாநாடு கூட்டுகிறது. அதில் இதற்குத் தகுந்த ஏற்பாடு செய்வது மிகவும் நன்றாக இருக்கும்.

### இஸ்லாமிய பிரசாரமும் ஹிந்து மதமும்

தீண்டாதார்களிடையே இஸ்லாம் மதப்பிரசாரம் செய்வது ஹிந்துக்களுக்கு மனவருத்தத்தையும் கொதிப்பையும் பரபரப்பையும் உண்டாக்கும் என்பது நிச்சயம். அவர்கள் இம்மாதிரி பரபரப்படைவதைப்பற்றி நாம் அவர்களைக் குறைகூறப் போவதில்லை. மல்கானாவில் சுத்தி இயக்கம் நடைபெற்றபோது முஸ்லிம்களுக்கு ஆத்திரமும் வருத்தமும் ஏற்பட்டது. இதுபோல தீண்டாதாரிடை இஸ்லாமியப் பிரசாரம் செய்து அவர்களை இஸ்லாத்தில் சேர்ப்போமாயின் ஹிந்துக்களுக்கு ஆத்திரமுண்டாகுவதில் ஆச்சரியப்படக்கூடிய விஷயமொன்றுமில்லை.

ஆனால், நாம் ஹிந்துக்களுக்கு ஒரு விஷயத்தைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறோம். முஸ்லிம்கள் தீண்டாதாரிடையே இஸ்லாம் மதத்தைப்பற்றிய பிரசாரம் செய்வது ராஜீய நோக்கத்திற்காகவோ அல்லது சமூக உயர்வுக்காகவோ அன்று. முஸ்லிம்கள் பிறமதத்தாரிடை பிரசாரம் செய்வதற்கும் இதர மதஸ்தர்கள் பிறமதத்தாரிடம் தங்கள் மதத்தைப் பற்றிய பிரசாரம் செய்வதற்கும் அஸ்திவாரத்திலேயே வித்தியாச மிருக்கிறது. 'முக்தி' ஒன்றை மட்டிலும் கருதியே இஸ்லாம்மதம் மக்களைத் தன்பால் அழைக்கிறது. இதரமதத்தவர்கள் ராஜீய நோக்கங்களுக்காகவும் ஜனத்தொகையை அதிகப்படுத்திக் கொள்வதற்காகவுமே பிரசாரம் செய்கின்றனர்.

ஹிந்துக்கள் தீண்டாதார்களுக்கு சமத்துவ உரிமை அளிக்க அவர்கள் அருகதையில்லை என்று கருதி இருந்தும் அவர்களைத் தனியே பிரிந்து போகவிடாமல் ஹிந்துமதத்திற்குள்ளேயே வைத்துக்கொள்ள முயற்சிக்கிறார்கள். எனவே, முஸ்லிம்கள் தீண்டாதாரிடை செய்யும் பிரசாரமும், அவர்களுக்கு விடுக்கும் அழைப்பும் தீண்டாதாரின் நன்மையையும், முஸ்லிம்களுக்கு இறைவனது அருளும் திருப்தியும் கிடைக்கவேண்டும் என்பதையும் கருதியேயாகும். இதுவன்றி தீண்டாதார்கள் இஸ்லாத்தைத் தழுவுவது கொண்டு முஸ்லிம் ஜனத்தொகை பெருகிவிடும், அல்லாஹுதஆலாவினிடத்தில் இதற்கென விசேஷமான பயன் எதுவு மேற்படுவதில்லை என்று நினைத்து இந்தப் பிரசாரத்தைச் செய்யும் முஸ்லிம் ஒருவனு மிருக்கமாட்டான். அப்படி நினைத்துச் செய்யும் முஸ்லிம் மிகவும் துர்அதிர்ஷ்ட முள்ளவன் என்பதிற் சந்தேகமில்லை. மனிதவர்க்கத்தைச்சேர்ந்த எங்களது சகோதரர்கள் வழிகேட்டை விட்டு மீண்டு இம்மை மறுமையிலுள்ள வேதனையை விட்டு முக்திபெற வேண்டும் என்ற ஒரு நோக்கத்திற்காகவே நாங்கள் இஸ்லாமியப் பிரசாரம் செய்கிறோம்.

### ஹிந்துக்கள் கவனிக்கவேண்டிய மற்றொரு விஷயம்.

நாம் மேலே கூறிய விஷயங்களைப் பார்க்கினும் ஹிந்துக்கள் அதிகமாகக் கவனிக்கவேண்டிய மற்றொரு விஷயமுண்டு. தீண்டாதார்கள் விஷயத்தில் முஸ்லிம்களுக்கு ஹிந்துக்களிடம் போட்டிபோட வேண்டிய சந்தர்ப்பம் ஒன்றுமில்லை. கிறிஸ்துவர்களுடன்தான் அவர்கள் போட்டிபோட வேண்டிய நிர்ப்பந்தமேற்படுகிறது. இக்கிறிஸ்துவர்கள் தென்னிந்தியாவில் தீண்டாதார்களை தங்கள் மதத்தில் சேர்த்து வருகிறார்கள். ஹிந்துக்கள் தீண்டாதாரின் மனவிசாரத்தை மாற்றிக்கொடுக்க முடியுமாயின் மாற்றிக்கொடுக்கட்டும். அதனைப்பற்றி நமக்கு விசாரமில்லை. ஆனால், அவர்கள் அப்படிச்செய்ய முடியவில்லை எனின், தீண்டாதார்கள் கிறிஸ்துவர்களாகுவதைப் பார்க்கினும் முஸ்லிமாகி விடுவதை ஆதரிக்கவேண்டும். ஏனெனில், இஸ்லாம் மதம் ஏகதெய்வ வணக்கம், நற்கிரியைகளைச் செய்தல் ஆகியவைகளுக்கு சிறந்த வழியைக் காட்டுவது அல்லாமல், தீண்டாதார்களைச் சிறந்த இந்தியர்களாகவும் ஆக்கமுடியும்.



### தாருல் இஸ்லாத்தின் போக்கு

ஸ்ரீமான் டாக்டர் அம்பெத்காரின் பிரசங்கத்தையும் நாஸிக் கான்பரன்ஸ் தீர்மானத்தையும் ஒட்டி "தாருல் இஸ்லாம்" என்ற 'பத்திரிகையில் "வழிப் போக்கன்" என்ற புனைப் பெயருள்ள ஒருவன் எழுதியதாக ஒரு வியாசம் வெளியாகி இருக்கிறது. இவ்வியாசத்தைப் பார்த்தால் முஸ்லிம் என்று தன்னைச் சொல்லிக் கொள்பவன் எவனும் அதனை எழுத முன்வரமாட்டான் என்று சாமான்யரும் எளிதில் உணர்ந்துகொள்ள முடியும். டாக்டரின் பிரசங்கத்தையும் கான்பரன்சின் தீர்மானத்தையும் கண்டு ஹிந்துக்களிலுள்ள சனாதனிகள் கவனிக்காமலும், அவர்களை மதம் மாற வேண்டாமென்று தடுத்து நிறுத்திக்கொள்ள முயற்சிக்காமலும் இருப்பதைப்பற்றி ஓலமிட்டு அவ்வியாசக் கர்த்தா கண்ணீர் வடிக்கிறார்.

தீண்டாதார்கள் எங்கே தங்களது ஹிந்து மதத்தைவிட்டு மாறிவிடுவரோ என்ற பயத்தின் மேலீட்டால் ஹிந்து சனாதனிகளைப் பற்றி ஒருவாறு எழுதிவிட்டு பிற மதங்களைப்பற்றிக் கூற முன் வந்திருக்கிறார். முதலில் கிறிஸ்துவ மதத்தைப்பற்றிக் கூறும்போது அம்மதத்தில் 100 கக்ஷிப் பிரிவுகளிருப்பதாகவும், அம்மதத்திலுள்ள பாதிரிமார்களின் வைதீக வெறியினால்தான் அந்த மதத்திற்குள் கக்ஷிகளும் பிரிவினைகளும் தோன்றின வென்று பொருள் படும்படியும் எழுதி, தீண்டாதாருக்குக் கிறிஸ்துவ மதம் சரியாக இல்லை என்றும் அந்த மதத்திலும் பல ஊழல்களிருக் கின்றனவாதலின் அதைத் தழுவுவதால் தங்களுக்குக் கதிமோக்ஷம் கிடைக்கக்கூடியதாக இல்லை என்றும் அவர்கள் நினைக்கும் தோரணையில் எழுதி இருக்கிறார்.

பிறகு, இஸ்லாம் மதத்தைப்பற்றிக் கூற முன்வந்து, இஸ்லாத்தில் அதிகப் பிரிவினைகளுக்கு இடமில்லாமலிருந்தும் வைதீக முல்லாமார்களின் நிர்வாகம் இஸ்லாத்தில் தாராளத் திருஷ்டியையும் சகிப்புத் தன்மையையும் காட்டாததால் பல சீர்திருத்த இயக்கங்கள் தோன்றி இருப்பதாகவும், சீர்திருத்தவாதிகளை வைதீகர்கள் "காபிர்கள்" என்று கூறி அவர்களை சூறையாட முன் வருகின்றனரென்றும் கூறி தன் பழைய ஏசல் மாலையை தொகுத்து தீண்டாதார்களைப் பயங்காட்டுகிறார். அதாவது, தீண்டாதார்கள் இஸ்லாத்தைத் தழுவினால் ஹிந்து மதத்தில் அவர்களுக்கு ஏற்பட்ட சங்கடம்போன்ற சங்கடங்கள் வேறு விதத்தில் முஸ்லிம் வைதீகர்களால் அவர்கட்கு ஏற்படும் என்றுகூறி மறைமுகமாக தீண்டாதார்கள் இஸ்லாத்தில் சேருவதைத் தடுக்க முயற்சிக்கிறார்.

இவர் இப்படி எழுதியது நமக்கு ஆச்சரியமான விஷயமல்ல. எதிர்பாராத விதமாக இவர் இப்படி எழுதிவிடவில்லை. இப்படி எழுதவே இவர் கடமைப்பட்டிருக்கிறார். ஏனெனில், இவரது "தாருல் இஸ்லாம்" பத்திரிகை "அரசியல் சமூகத்துறையில் இந்து முஸ்லிம் மேன்மைக்குழைக்கும் தேசீயப் பத்திரிகை" என்று அதன் டைட்டில் பேஜிலேயே பெரிய எழுத்துக்களில் எழுதப்பட்டிருப்பதால் இவ்வளவுகூட எழுதாமல் ஹிந்து முஸ்லிம் மேன்மைக்கு உழைக்க முடியுமா? தீண்டாதார்கள் அனைவரும் வேறு மதங்களில் சேர்ந்துவிட்டால் ஹிந்துக்களுக்கு இப்பொழுது இருக்கிற அரசியல் பாத்தியதைகளில் கொஞ்சம் குறையுமன்றோ? ஹிந்துக்களின் அரசியல் மேன்மைக்குப் பாதகம் வரக்கூடிய இவ்விஷயத்தை "தாருல் இஸ்லாம்" எப்படி ஆதரிக்க முடியும். அதிலும் அரசியல் சமூகத்துறையில் மேன்மைக்கு உழைக்கும் விஷயத்திலும்கூட முதலில் ஹிந்துக்களின் மேன்மைக்காகவும் பிறகுதான் முஸ்லிம்களின் மேன்மைக்காகவும் உழைக்கும் பத்திரிகை என்று கருதும்படி "ஹிந்து முஸ்லிம் மேன்மைக்கு உழைக்கும் தேசீயப் பத்திரிகை" என்று எழுதி இருப்பதை நேயர்கள் கவனிக்க வேண்டும்.

ஆதலால்தான் தீண்டாதார்கள் பிறமதம் சேருவதை அது விரும்பாமல், அவர்கள் கிறிஸ்தவர்களாகவோ முஸ்லிம்களாகவோ மாறுவதை அது ஆதரிக்காமல் அந்த மதங்களிலும் பிரிவினைகளும் கக்ஷிகளும் இருக்கின்றன என்றும், இவ்விஷயத்தில் எல்லாமதமும் ஒன்றுதானென்றும் தீண்டாதார்கள்கருதும் தோரணையில்எழுதி இருப்பதுடன், தீண்டாதார்களின் கண்ணைத் துடைப்பதற்காக சனாதனிகள் ஏதேனும் செய்யட்டும் என்பதற்காக, அவர்கள் மௌனமாக இருப்பதைக் கண்டித்தும் எழுதி இருக்கிறது.

எனினும், அந்தப்பத்திரிகை இஸ்லாமியப் பெயர்வைத்துக்கொண்டு இருப்பதால் முஸ்லிம்கள் இவ்வியாசத்தைக் கண்டு வருந்துவர் என்று நினைத்துக் "காக்காய் பிடிக்கும்" தோரணையில் "தாருல் இஸ்லாம் ஒரு முஸ்லிம் பத்திரிகை. முஸ்லிம் சமூக சீர்திருத்தத்திற்காக உழைத்து வந்திருக்கிறது. முஸ்லிம்கள் தாராள நோக்கங்கொள்ள வேண்டும். சகிப்புத் தன்மை காட்டவேண்டும். அபிப்பிராய பேதங்கொள்பவர்களை 'காபிர்கள்' என்று பட்டப் பெயர் சூட்டலாகாது என்றுநாம் கேட்டுக்கொள்கிறோம்" என்றும் எழுதி இருக்கிறது. முஸ்லிம் சமூகத்தின் சீர்திருத்தத்திற்காக இந்தப்பத்திரிகை உழைத்திருக்குமாயின் அதன் டைட்டில் பேஜில் "அரசியல் சமூகத்துறையில் ஹிந்து முஸ்லிம் மேன்மைக்குழைக்கும் தேசீய பத்திரிகை" என்று எழுதுவானேன்? என்று வினவுகின்றோம். இப்பொழுது முஸ்லிம் சமூக சீர்திருத்தத்திற்கு உழைப்பதில்லை; இதற்கு முன்னர்தான் அப்படி உழைத்தது என்று கூறும் பக்ஷத்தில் "காதியானிக் கொள்கையைப் பரவச் செய்வதற்காக உழைப்பது சமூகச் சீர்திருத்தத்திற்காக உழைப்பதாகுமா? என்று வினவுகின்றோம்.

### தீண்டாதாருக்கு ஒரு வார்த்தை

தீண்டப்படாதார் இஸ்லாத்தைத் தழுவுதால் இஸ்லாத்திற்கு இப்பொழுது இல்லாத புதியதொரு மேன்மைவந்துவிடப்போவதில்லை. பூவுடன்சேர்ந்த நாரு மணம்பெறுவதுபோல் இஸ்லாத்தைத் தழுவும் தீண்டாதார்கள் பிரத்தியக்ஷமாக இம்மையில் சமத்துவ உரிமையை அடைந்துவிடுவதுடன் மறுஉலக வாழ்க்கையின் மேன்மையைக் கருதி இஸ்லாம்மதம் காட்டும் வழியில் செல்வார்களாயின் அவர்களுக்கு மறுஉலகில் முக்தியும் கிடைக்கும். அல்லாமல், ஹிந்துக்களிடத்திலேயே இன்னும் அதிகமான ராஜிய உரிமைகளை அடையவேண்டும் என்பதை அவர்கள் மனத்தில் வைத்துக்கொண்டு பிறமதம் போவதாக அவர்களை பயங்காட்டுவார்களாயின் அதனால் எங்களுக்கு எவ்வித வருத்தமும் கிடையாது. பிறமதத்தைத் தழுவ உத்தேசித்திருப்பவர்கள், சன்மார்க்கத்தை அடையக்கருதுபவர் யாவரிடத்திலும் இஸ்லாம் மதத்தைப்பற்றி எடுத்துக் கூறுவதும், அவ்வாறு வருபவர்களை ஏற்று அன்புடன் நடத்துவதும் முஸ்லிம்களது கடமையாக இருப்பதாலேயே முஸ்லிம்கள் இவ்வழைப்பை விடுத்திருக்கின்றனர். சத்தியத்தையும் அசத்தியத்தையும் நன்கு ஆராய்ந்து சத்தியத்தையே பின்பற்றுமாறு தீண்டப்படாதார்களிடம் மறுப்படியும் வேண்டிக்கொள்கிறோம். இஸ்லாம் வாழ்க, சத்தியம் வாழ்க. சத்திய இஸ்லாம் வாழ்க?

---

## காதியானி மத நிலைமை

(தென்காசி மீ. இ. மு. அபுல் ஹஸன்ஷாதலி வரைவது.)

இவ் வியாசத்தின்கண் மிர்ஸா குலாம் அஹ்மத் என்பவரின் சில சூக்ஷிகளையும் முன்னுக்குப் பின்னுள்ள அவரது கூற்றுக்களையும் எடுத்து விளக்கி அக்கொள்கைகள் குர்ஆன் ஹதீதுகளுக்கு நேர்மாற்றமாகயிருக்கிற விபரத்தையும் இங்கு விவரிப்பது முக்கியமெனக் கருதுகின்றனம்.

பாஞ்சால மாகாணத்தில் குருதாஸ்பூரையடுத்த காத்யான் என்னும் கிராமத்தில் பிறந்த குலாம் அஹ்மத் என்பார் பிழைப்புக்கு வகையின்றி வெளியூர் போக நேர்ந்ததால் ஸியால்கோட்டில் மாதம் ரூ. 15 சம்பளத்தில் கிளர்க் வேலையிலமர்ந்தார். இச்சம்பளம் அவருக்கு திருப்தியளிக்க வில்லையாதலால் லாலா



பீம்சேன் என்னும் ஓர் வக்கீலிடம் சேர்ந்து சட்டம் படித்தார். இதுபொழுது சாவகாசமான நேரங்களில் தமது அறையில் கதவைத் தாளிட்டுக்கொண்டு வஸியம் பண்ணுவதற்கு வேண்டிய மந்திரம் தந்திரங்களைச் செய்து வந்தார். சட்டப் பரீக்ஷையில் தேறவில்லையாகையால் தமது ஊருக்குத் திரும்பி வந்து புத்தகம் இயற்றும் வேலையிலீடுபட்டு "பராஹீனே அஹ்மதிய்யா" என்ற புத்தகத்தைக் கோர்வை செய்வதாயும், அது இஸ்லாம் மதம், உண்மையானதென்று ஸ்தாபிக்கக்கூடிய முக்கிய நூலென்றும் அப்புத்தகம் எழுதி அச்சிடுவதற்குப் பணம் அவசியமென்றும், ஒவ்வொருவரும் பத்து ரூபாய் வீதம் சந்தா அனுப்பினால் புத்தகம் சீக்கிரம் வெளியாய் விடுமென்றும் விளம்பரம் செய்தார்.

இந்தப் புத்தகத்தில் ஹஸ்ரத் ஈஸா நபியவர்கள் இவ்வுலகிற்கு மறுமுறை விஜயம் செய்வார்களென்பதை தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளார். அவர் எழுதிய அப்புத்தகம் இஸ்லாத்துக்கு அவசியம் தேவைப்பட்டதென்று நம்பி முஸ்லிம்கள் அவருக்கு ஏராளமாகப் பணத்தைக் கொடுத்துதவினர். ஜனங்கள் தம்மை நம்பிவிட்டார்களென்பதை மிர்ஸாஜீ அறிந்ததும் புத்தகம் இயற்றும் வேலையுடன் ஜனங்களுக்கு முரீதுகொடுக்கும் தொழிலையும் கைகொண்டார். இது சற்று பலன்பெருவதைக் கண்டதும் தனது முரீதுகளனைவரும் டிஸம்பர் ரஜாநாட்களில் காதியானில் வருஷந்தோறும் கூடவேண்டுமென்று ஏற்பாடு செய்தார்.

இவ்வாறு கூடியகூட்டத்தில், தாம் எல்லா அம்சங்களிலும் ஹஸ்ரத் ஈஸா நபியவர்களைப் போல் அவதரித்திருப்பதாகப் பகிரங்கமாகக் கூறினர். இதையும் தமது குழுவினர் நம்பிவிட்டனரென்பதைத் தெரிந்ததும் அடுத்தாற்போல் ஹஸ்ரத் ஈஸா நபியவர்களோ மரணமடைந்து விட்டார்கள்; ஆனால் இரண்டாந் தடவை இவ்வுலகத்தில் வருவதாக ஹதீதுகளில் சொல்லப்பட்ட ஈஸாநான் தான் என்று வெளிப்படையாகக் கூறினர். இதை ஜனங்கள் கேட்டதும் "ஈஸா நபியுவர்களுக்கு முன்னதாக மஹ்தீ அலைஹிஸ்ஸலாம் வரவேண்டுமே என்று அவரிடம் கேட்க, அந்த மஹ்தியும் நான்தான்" என்று சொன்னார். அப்பொழுது ஜனங்கள் அவரிடம் "தாங்களே தங்களுடைய பராஹீனெ அஹ்மதிய்யா வென்ற கிரந்தத்தில் ஹஸ்ரத் ஈஸா நபியவர்கள் இரண்டாந்தடவை இவ்வுலகத்தில் வருவார்களென்று ஒப்புக்கொண்டிருக்கிறீர்கள், தவிரவும் அந்தக் கிரந்தம் ஆண்டவன் பக்கமிருந்து உதயமாகி தங்களால் எழுதப்பட்டதென்றும், அந்த நூலைத் தாங்கள் ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்ல மவர்களுடைய சமுகத்தில் சமர்ப்பித்ததில் அவர்களும் அதை அங்கீகரித்தார்களென்றும் நவின்றிருக்கின்றீர்கள். அந்தப் புத்தகத்தின் எந்தப்பக்கத்தில் ஈஸாநபியவர்கள் இரண்டாந்தடவை வருவார்களென்று எழுதிவிட்டு இப்போது அதைமறுக்கிறீர்களோ அந்தப்பாகம் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களின் பார்வையில் வரவில்லையோ?" என்று ஜனங்கள் கேட்டார்கள். அதற்கு ஜவாபாக மிர்ஸாஜீ "அப்போது வாக்குச் சொல்லப்பட்ட ஈஸா நான்தான் என்று எனக்கு ஆண்டவன் பக்கமிருந்து அறிவிப்பு (வஹீ) வந்து கொண்டிருந்தது. ஆண்டவன் பக்கமிருந்து வந்த (வஹீயை) அறிவிப்பை நான் பொருட்படுத்தவில்லை. அப்படியிருந்தும் வாக்குச் சொல்லப்பட்ட ஈஸா நானே என்பதாக திரும்பத் திரும்ப எனக்கு வஹீவந்துகொண்டேயிருந்தது" என்று சொன்னார்.

அதுபொழுது ஜனங்கள் அவரை நோக்கி "நீங்கள் உங்களுக்கு வந்த வஹியைப்பற்றிக் கவனிக்காமலிருந்து விட்டீர்களென்பதையொப்புக் கொள்கிறோம். ஆயினும் தங்கள் புத்தகத்தை ரஸூல் (ஸல்) அவர்கள் அங்கீகரித்தார்களென்று சொன்னீர்களே! அதில் தவறான கொள்கைகளிருந்தால் அவர்கள் அதை எடுத்துக்காட்டியிருப்பார்களல்லவா? ஈஸா நபியவர்கள் மறுமுறை இவ்வையகத்திற்கு வருவார்களென்று தங்கள் புத்தகத்தில் எழுதியிருப்பதை ரஸூலுஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் ஒப்புக்கொண்டிருப்பதால் அவர்களுடைய விஸ்வாசமும் அப்படித்தான் என்பதாக நாங்கள் அதை ஒப்புக்கொள்கிறோம். ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் கனவில் வந்து தங்கள் நூலை அங்கீகரித்ததாக சொல்லிவிட்டு இப்போது அதற்கு மாற்றமாகச்சொன்னால் அது தப்பாகும்; ஒருவேளை தாங்கள் கண்ட கனவு பொய்யென்றிருக்குமானால் இப்போது நீங்கள் ஈஸா என்று தாவாச் செய்வதும் பொய்தான்" என்று கூறினர்கள். இது நியாயம்தான் என்று மற்ற பொது ஜனங்

களுக்குத் தெரிந்தது. ஆனால் அவரிடம் முரீது வாங்கிய சிஷர்களோ அவரை விட்டுவிலக முடியாமல் சிக்கிக்கொண்டார்கள். தமது சிஷர்கள் தம்மை ஈஸா வென்று ஒப்புக்கொண்டுவிட்டார்களென்பது தெரிந்ததும் சமயம்பார்த்து மிர்ஸாஜீ தாம் நபியென்பதாகவும் பகிரங்கமாகக் கூறினார்.

### காதியானி மதத்தின் முக்கியமான கோள்கைகள்.

குர்ஆனுக்கும் ஹதீதுக்கும் நேர்முரணுயுள்ளதும், முஸ்லிம்களை வழிகெடுக்கக் கூடியதும், காதியானி மதற்திற்கே அஸ்திவாரமாயுள்ளதுமான மூலக்கொள்கைகள் நான்கு உள. மிர்ஸாஜீ கூறுவதாவது.—(1) ஹஸ்ரத் ஈஸா நபியவர்களை அவர்களுடைய யூதக்கூட்டத்தார் சிறைப்படுத்தி சிலுவையி லறைந்தபின் அறைகுறை உயிருடன் சிலுவையிலிருந்து இறக்கி விட்டார்கள். அதன்பின் ஈஸா நபிய வர்கள் மறைவாயிருந்து தங்கள் சரீரத்திலுள்ள காயங்களுக்கு மருந்துபோட்டு சொஸ்தப்படுத்திக் கொண்டிருந்து கடைசியாக காஷ்மீர் தேசத்திற்கு ஒளித்து ஓடிவிட்டார்கள். அங்குவந்தபின் 87, வருஷம் உயிருடனிருந்து மவுத்தாகி காஷ்மீர் தேசத்தின் முக்கிய பட்டணமாகிய ஸ்ரீநகரில் கான்யார் வீதியில் அடக்கப்பட்டிருக்கிறார்கள் ; அவர்களுடைய கப்ரு அங்கிருக்கிறது.''

(2) மிர்ஸாஜீ கூறுகிறார் :—“ ஹஸ்ரத் ஈஸா நபியவர்கள் மரணமடைந்து விட்டார்கள்; மரணமானவர்கள் திரும்ப உலகத்திற்கு வரமாட்டார்கள் ; ஆதலின், எந்த ஈஸா வருவார்களென்று ஹதீதுகளில் கூறப்பட்டிருக்கின்றனவோ அந்த ஈஸா வேறு மனிதர் என்றும், அவர் ஈஸாவைப்போல் அம்சங்கள் பொருந்தி வருவாரென்றும் கருத்துக்கொள்ள வேண்டியதிருக்கின்றது. ஆகவே, ஈஸாவைப்போல் வருபவரும், பின்னால் வரப்போகிறதாக முன்னால் அறிவிக்கப்பட்ட ஈஸாவும் நான்தான்.''

(3) மிர்ஸாஜீ கூறுகிறார் :—“ஹஸ்ரத் ஈஸா நபியவர்கள் இரண்டாந்தடவை இவ்வுலகத்திற்கு வருவதற்கு முன்னால் இமாம் மஹ்தீ (அலை) அவர்கள் வருவார்களென்று ஹதீதுகளில் கூறப்பட்டிருக்கின்றன. ஹதீதுகளில் கூறப்பட்ட அந்த மஹ்தீயும் நான்தான்.''

(4) மிர்ஸாஜீ கூறுகிறார் :—“நான் இந்தக் காலத்தின் நபியாகவும், ரஸூலாகவுமிருக்கிறேன் ; எவன் என்னை நபியென்று ஈமான் கொள்ளவில்லையோ அவன் காபிரும் நரகவாதியுமாயிருக்கிறான் ” என்பதாம்.

### மேற்கண்ட நான்கு கோள்கைகளுக்கும் மறுப்பு

மேலே குறிப்பிட்டுள்ள மிர்ஸாஜீயின் நான்கு கொள்கைகளும் குர்ஆன் ஷரீபுக்கும், ஹதீதுக்கும், தீனுடைய இமாம்களின் வியாக்யானங்களுக்கும் முற்றிலும் விரோதமாயிருக்கின்றன. மேற்படி கொள்கைகளை ஸ்தாபிப்பதற்காக மிர்ஸாஜீ கூறும் ஆதாரங்களைக் கவனித்தால் அவைகள் முற்றிலும் தப்பாகவும், புரட்டாகவும் ஏமாற்றத்தைக் கொடுக்கக் கூடியதுமாயிருக்கின்றன வாதலால் அவைகள் ஒவ்வொன்றையும் இனி ஆராய்ச்சி செய்வோமாக.

(1) ஹஸ்ரத் ஈஸா நபியவர்கள் சிலுவையிலறையப்பட்டதாகவும் காஷ்மீர் தேசத்தில் மரணமானதாகவும் மிர்ஜாஜீ சொல்கின்றார். ஆனால் திருக்குர்ஆன் ஷரீபில் தெளிவாக “ ஈஸா நபி கொல்லப்படவுமில்லை சிலுவையிலறையப்பட்டவுமில்லை'' என்று கூறப்பட்டிருக்கிறது. ஈஸா நபியவர்கள் சிலுவையிலறையப்பட்டது பொய்யாகவும், குர்ஆனுக்கு விரோதமாகவு மிருக்கும்போது அவர்கள் காயங்களுக்கு மருந்து போட்டதாகவும், காஷ்மீருக்குப் போனதாகவும் மிர்ஸாஜீ கட்டும் கதையானது சுத்தப்பிசகும், முழுப் பொய்யாகவு மிருக்கிறது.

(2) மேலும் குர்ஆன் ஷரீபில் மேலே சொன்ன வாக்கியத்தின் கடைசிப்பாகத்தில் “ நிச்சயமாக ஈஸாவானவர்கொல்லப்படவில்லை; மேலும், ஆண்டவன் அவரைத் தன் பக்கல் உயர்த்திக்கொண்டான் ; ஆண்டவன் சர்வ தத்துவமும், சர்வஞானமுமுள்ளவன்'' என்றும் கூறப்பட்டிருக்கிறது. ஹஸ்ரத் ஈஸா நபியவர்கள் கியாமத்து வருவதற்கு சமீபமாக இவ்வுலகிற்கு வருவார்கள் என்னும் விஷயத்தை மிர்ஸாஜீயே தமது அருள் வேதமான ‘ பராஹீனெ அஹ்மதிய்யா, ’வென்னும் கிரந்தத்தில் ஒப்புக்கொண்டிருக்கிறார். இன்னும், அவர்கள் ஹஜ்ஜு செய்வார்கள்; 45 வருஷகாலம் இவ்வுலகில் ஜீவித்திருந்து மதீனமா நகரில் மரணமடைவார்கள் ; ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ரௌலா ஷரீபிலேயே அடக்கப்படுவார்கள் என்றும் கூறப்பட்டிருக்கிறது.



இவ்விஷயத்தைப்பற்றி ஹதீது ஷரீபில் பின்வருமாறு காணப்படுகிறது:—“ மர்யமுடைய குமாரரான ஈஸா (அலை.) அவர்கள் இவ்வுலகத்தி லிறங்குவார்கள் ; விவாஹம் செய்வார்கள் ; அவர்களுக்குச் சந்ததியுண்டாகும் ; 45 வருஷம் இவ்வுலகிலிருந்தபின் மரணமடைந்து என்பக்கத்தில் என் கப்ரினருகே அடங்கப்படுவார்கள் ; பின்னர் நானும் ஹஸ்ரத் ஈஸப்னுமர்யமும் அபூபக்கருக்கும் உமருக்கும் மத்தியிலிருந்து எழும்புவோம் '' என்பதே.

### இந்த ஹதீதிலுள்ள விஷயங்களை ஈண்டு கவனிக்க வேண்டியதிருக்கிறது

(1) ஈஸா நபியவர்கள் இவ்வுலகில் இறங்கி, 45 வருஷகாலமிருந்து பின்னர் மரணமடைவார்களென்று நபிபெருமானவர்களால் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. உதாரணமாக “தும்மயமூத்து'' என்னும் பதத்தினால் இவ்விஷயம் நன்கு புலனாகிறது. ஆனால் ஈஸா நபியவர்கள் இன்றளவும் இறங்கவுமில்லை, மரணமாகவுமில்லை யென்று தெளிவாய்த் தெரிகிறது.

(2) இந்த ஹதீதில் ஈஸா நபியவர்கள் விவாஹம் செய்வார்கள்; அவர்களுக்குச் சந்ததியுண்டாகும் என்று கூறப்பட்டிருக்கிறது. மிர்ஸாஜீயின் “ லயிமா அஞ்சாமே ஆத்தம் '' என்னும் கிரந்தத்தின், 53-வது பக்கத்தின் குறிப்பில், முஹம்மதீ பேகம் என்னும் மங்கையை விவாஹம் செய்வதைக்குறித்து இந்த ஹதீதை ஆதாரம் காட்டி, இதில் ஹஸ்ரத் ஈஸாவின் நிகாஹைப்பற்றி விவரிக்கப்பட்டிருப்பதின் கருத்து, இந்த முஹம்மதீ பேகம் என்னும் பெண்ணுடன்தான் விவாஹம் செய்வதாகும் என்று குறிப்பிட்டிருக்கிறார். எனவே, மிர்ஸாஜீயின் திருமணம் முஹம்மதீ பேகத்துடன் நடைபெறவில்லை யாதலால் அதே ஏக்கத்தில் அவர் மரணமடைந்து விட்டார். ஆதலின் மிர்ஸாஜீ வாக்குச் சொல்லப்பட்ட ஈஸாவென்பது பொய்யாய்விட்டது.

(3) இந்த ஹதீதில் ஈஸா நபியவர்கள் ரஸூல் (ஸல்.) அவர்களுக்குப் பக்கமாக அடக்கப்படுவார்களென்றும், அவர்களுடைய கப்ரு நபிபெருமானவர்களுடைய கப்ரையொட்டியிருக்குமென்றும் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் மிர்ஸா சாஹிபு லாகூரில் மரணமாய் குர்தாஸ்பூர் காதியான் கிராமத்தில் அடக்கப்பட்டார் என்பது உலகறிந்த உண்மை. மதீனா எங்கே, காதியான் எங்கே; இரண்டுக்குமிடையில் உதயகிரி அஸ்தகிரியின் வித்தியாசமிருக்கின்றது.

(4) இந்த ஹதீதில் நபிகள்பிரான் (ஸல்.) அவர்கள் ‘ மயீ ’ என்ற பதத்தை உபயோகித்திருக்கிறார்கள். அதன் விபரமாவது :—ஒருவரை ஒருவரின்பக்கமாய் அடக்கம் செய்யுங்கள் என்று கூறப்பெறுமாயின் எவரின்பக்கம் தபன் செய்வதற்கு சொல்லப்படுகிறதோ அவர் முன்னதாகவே இறந்து அடக்கம் செய்யப்பட்டிருக்கவேண்டும். இவரை எவர்பக்கம் அடக்கம் செய்வதற்கு சொல்லப்படுகிறதோ அவர் பின்னால் மரணமாகப்போகிறவரென்று நீங்கள் எல்லீரும் அறிந்து கொள்ளக்கூடும். எனவே, ஈஸா (அலை.) என்பக்கம் அடக்கம் செய்யப்படுவார்களென்று நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் நவின்றுள்ளதிலிருந்து நபிகள் பிரான் (ஸல்.) அவர்கள் முன்னதாகவே இவ்வுலகிலிருந்து மறைந்து போகிறவர்களென்றும், ஈஸாநபியவர்கள் பின்பு இறக்கப்போகிறவர்களென்றும் நிச்சயமாய்த் தெரியவருகிறது. மேலும், நபிகள்நாயகம் இந்தஹதீதை தங்கள் ஜீவியகாலத்தில் திருவுள்ம் பற்றியிருந்தார்கள் என்பதும் நிச்சயம். எனவே, ஈஸாநபியவர்கள் நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் காலம்வரை மரணமாய் விடவில்லை என்றிருக்கும்போது, ஈஸா நபியவர்கள் நபிகள்பிரான் (ஸல்.) அவர்களுக்கு நூற்றுக்கணக்கான வருஷங்களுக்கு முன்பே காஷ்மீரில் மரணமாய்விட்டார்களென்று சொல்வதை இப்பொழுது எவர் வார்த்தையைக் கொண்டு ஒப்புக்கொள்ள முடியும். காஷ்மீரெங்கே, மதீனாஷரீப் எங்கே. *

### ஒரு தப்பபிப்பிராயத்தை நிவர்த்தித்தல்

சில மிர்ஸாயீ பார்ட்டியார் பொதுஜன முஸ்லிம்களை நோக்கி, ஈஸா நபியவர்களை நபிகள் பிரான் (ஸல்.) அவர்களின் கப்ர்ஷரீபில் அடக்கம் செய்யப்படுமானால் நபிகள் பிரான் (ஸல்.) அவர்களின் கப்ர்கோரியைத் தோண்டி அடக்கம் செய்யப்படவேண்டும். அவ்விதம் நபிகள்பிரானவர்களின் கப்ர் தோண்டப்படுவது நாயகமவர்களுக்கு மிக்க அவமரியாதையாகுமன்றோ? என்று கூறி மனதைத் தத்தளிக்கச் செய்கிறார்கள். இதற்கு ஜவாபாவது,

* இது விஷயங்களை அதிவிரிவாய் “ஹயாத்தே மஸீஹ்'' இரண்டாம்பாகத்தில் காணலாம்.

இக்கூற்று முற்றிலும் ஏமாற்றமும், மௌட்டீகமுமாகும். ஹதீதில் வந்த 'கப்ரு' என்ற பதத்துக்கு 'மக்பரா' என்ற கருத்தாகும். இந்தப்பதம் அந்தக்கருத்தில் பெரும்பான்மையாக வழங்கப்படுகிறது. உதாரணமாக ஷைக் அப்துல்ஹக் முஹத்திஸ் திஹ்லவியவர்களும், அல்லாமா முல்லா அலீகாரி மக்கீ முஹத்திஸ் அவர்களும் இந்த ஹதீதின் விரிவுரையில் "இந்த இடத்தில் 'கப்ரு' என்ற பதத்துக்கு 'மக்பரா' என்ற பதத்தின் கருத்தாகும்" என்று விளம்பியுள்ளார்கள். இந்த ஹதீதிற்கு நாயகமவர்களின் தொடர்மொழிகளைக் கொண்டே ஆதரவு கிடைக்கிறது. அதாவது, என்பக்கம் ஈஸா நபியவர்கள் அடக்கம் செய்யப்படுவார்களென்று நபிகள் கோமான் (ஸல்.) அவர்களே அருளியுள்ளார்கள். 'மயீ' என்ற பதத்தின் அருத்தம் பக்கல், சமீபம் என்றாகும். ஆகவே, நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் பக்கம் அடக்கம் செய்யப்படுவதென்றால் நபிகள் பிரானின் புனித கப்ர்கோரியை தோண்ட வேண்டுமென்பதில்லை. ஆகவே நபிகள் பிரானவர்களின் அருகாமையில் ஹஸ்ரத் ஈஸா (அலை.) அவர்கள் அடக்கப் படுவார்கள் என்பது நன்கு அறியக்கிடக்கின்றது.

தவிரவும், இரண்டு கப்ர் அறைகள் ஒன்றோடொன்று சேர்ந்திருக்கும்போது அந்த இரண்டையும் ஒன்றென்று சொல்லப்படுவதும் சாத்தியம்.

உதாரணமாக, ஹஸ்ரத் அபூபக்கர், ஹஸ்ரத் உமர் (ரலி.) ஆகிய இருவரின் கப்ருகளும் ரௌலா ஷரீபினுள் நாயகமவர்களின் கப்ருடன் சேர்ந்தே இருக்கிறது. இவ்விரு கப்ர்களின் சம்பந்தத்தைப்பற்றி மிர்ஸாஜீ தமது நூலில் கூறுவதாவது:—"எனினும் அபூபக்கர், உமர் (ரலீ,) ஆகிய இருவர்களை ஷீஆ வகுப்பினர் காபிரென்று கூறுகின்றனர். மேலும், எல்லாக் காபிர்களைவிடவும் மகாகெட்டவர்களென்று மதிக்கின்றனர். ஆனால், அவ்விருவர்களுக்கும், நாயகமவர்களுடன் ஒரே கப்ரைப் போல் சேர்ந்து அடக்கம் செய்யப்பட்டிருக்கிற அப்படிப்பட்ட பதவி கிடைத்துளது" (நுஸூல மஸீஹ்-47-ப.)

எனவே, எவ்வாறு மிர்ஸாஜீ "அபூபக்கர், உமர் (ரலி), நாயகம் (ஸல்.) அவர்களுடன்கூடிய மூன்று கப்ர் அறைக்கும் ஒரே சமாதியறையென்று பகர்கின்றாரோ அவ்வாறே நபிகள் பிரானுடையவும் ஈஸா நபி அவர்களுடையவும் கப்ர் அறை ஒன்றாகவே இருக்கின்றது. ஆதலின், மிஷ்காத் ஷரீபின் கருத்தாகிறது, ஈஸா (அலை.) அவர்கள் நாயகத்திற்குச் சமீபமாக அபூபக்கர், உமர் (ரலி.) ஆகியவர்களுக்கிடையில் அடக்கம் செய்யப்படுவார்களென்பதேயாகும். மேலும், இன்றளவும் அந்த இடத்தில் ஒரு கப்ர் அறைக்குள்ள இடம் காலியாக விட்டு வைக்கப்பட்டிருக்கின்றது. உதாரணமாக, மிஷ்காத் ஷரீபிலேயே அப்துல்லாஹிப்னு ஸலாம் அவர்களின் ரிவாயத்து ஒன்று காணப்படுகிறது. அதாவது:—"தௌராத்து வேதத்தில் நபிகள்நாயகம் (ஸல்.) அவர்களின் இலக்ஷணங்களைப்பற்றி எழுதப்பட்டிருப்பதில் ஹஸ்ரத் ஈஸப்னுமர்யம் (அலை.) அவர்கள் நபிகள் பிரான் (ஸல்.) அவர்களுடன் அடக்கம்செய்யப்படுவார்கள் என்பதும் ஒன்றாகும்" இந்த ஹதீதைத் தெரிவித்த "அபூமௌதூத்" ஆனவர் கல்வியில் சிறந்த மேதாவி; இனிய முறையில் பிரசங்கம்செய்யும் வன்மை வாய்ந்தவர்; அபூஸயீத் குத்ரீ (ரலி.) என்ற ஸஹாபியைக் கண்கூடாய் பார்த்தவர். மேலும், மதீனாவாசியுமாவர். அவர்கள் கூறுவதாவது":—ரௌலா ஷரீபினுள் இப்போது ஒரு கப்ர் அறையின் இடம் பாக்கியிருக்கின்றது" என்பதாம். இந்நூலை இயற்றிய மௌலவீ முஹம்மது இப்ராஹீம் ஸாஹிப் ஸியால் கோட்டி என்பவர் கூறுவதாவது:— நான் மதீனா ஷரீபுக்குச் சென்றபோது மேலே குறிப்பிட்டுள்ள இடம் காலியாகவிருக்கப்பார்த்து வந்திருக்கின்றேன். சந்தேகித்தவர்கள் நேரில் சென்று பார்த்து திருப்தியடைந்து கொள்ளட்டும் என்பதே.

(5) இந்த ஹதீதில் நபிகள் பெருமானார் (ஸல்.) அவர்கள் தங்களின் புனிதவீட்டில் நான்கு கப்ர்களின் விஷயமே நவின்றிருக்கிறார்கள். ஒன்று தங்களுக்குரியது, மற்றது அபூபக்கர் (ரலி.) அவர்களுக்குரியது, மூன்றாவது உமர் (ரலி.) அவர்களுக்குரியது, நான்காவது ஹஸ்ரத் ஈஸாநபியவர்களுக்குரியது என்று பகிரங்கமாய்விட்டது. ஆனால், மிர்ஸாஜீயின் சமாதிக்குழியைப்பற்றி யாதொன்றும் தெரிவிக்கவில்லை.

(6) இந்த ஹதிதினால் ஹஸ்ரத் ஈஸா (அலை.) அவர்கள் ஹஸ்ரத் உமர் (ரலி.) அவர்களின் காலம் வரையிலும் மரணமடையவில்லையென்பது நன்கு புலனாகிவிட்டது. காரணமென்னவெனின், மூன்றுகப்ருகள் இருக்கின்றன; நான்காவதின் இடம் காலியாக இருப்பதினாலேயாம். மேலும், அபூமௌதூத் என்ற ராவியின் காலம்வரை காலியாகவே யிருந்தது. மேலும் இன்றளவும் காலியாகவேயிருக்கின்றது. இந்த ஒரு ஹதீதினாலேயே மிர்ஸாஜீயின் எல்லா வாதங்களும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது.

இன்னும் ஹஸ்ரத் ஈஸா நபியவர்கள் ஹஜ்ஜு செய்வதைப்பற்றி ஸஹீஹ் முஸ்லிமில் ஹதீது காணப்படுகிறது. நபிகள்பிரான் (ஸல்) அவர்கள் "எவன்வசத்தில் என் ஆன்மாயிருக்கின்றதோ அவ்வாண்டவன் மீது பிரமாணமாக" என்று சத்தியம்செய்து பின்வருமாறு கூறியிருக்கின்றார்கள். ஈஸா (அலை) அவர்கள் ஹஜ்ஜுக்கும் உம்ராவுக்கும் "லப்பைக்க" என்னும் சப்தத்தை உயர்த்துவார்கள்" என்பதாம். ஆனால் மிர்ஸாஜியோ ஹஜ்ஜு செய்யவில்லை என்பது யாவருக்கும்தெரிந்தவிஷயம். மிர்ஸாஜீ மஸீஹ்மவ்ஊதாயிருந்தால் அல்லாஹுதஆலா எல்லா இன்னல்களையும் தூரப்படுத்தி அவருக்கு ஹஜ்ஜின் பாக்கியத்தை அருளியிருப்பான். ஏனெனின், மஸீஹ் மவ்ஊத் ஹஜ்ஜு செய்வாரென்ற இந்த அடையாளம் பூர்த்தியாவதற்காகவாம். ஆனால், அல்லாஹுதஆலா அவருக்கு ஹஜ்ஜின் பாக்கியத்தை அளிக்காமலிருக்கும் பொழுது, அல்லாஹ் அவரின் மஸீஹ் என்னும் வார்த்தையை அழித்து விடுகிறான் என்றுதான் அர்த்தமாகிறது.

(3) இமாம் மஹ்தியின் விஷயமாக அநேக ஹதீதுகளில் தெளிவாக விவரிக்கப்பட்டிருக்கிறதென்னவெனின், அவர்கள் ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் சந்ததியிலுள்ளவர்கள், பாதிமா (ரலி) அவர்களின் சந்ததிகளில் இமாம் ஹஸன் ஹுஸைன் (ரலி) அவர்களின் வம்சத்தினின்றுமுள்ளவர்கள். அதாவது :—தாய் தகப்பன் இருசார்பிலும் செய்யிதாகயிருப்பார்கள்; அரபு தேசத்தின் அதிபராகவும், அரசராகவுமிருப்பார்கள். என நபிகள் நாயகம் அருளியிருக்கின்றார்கள். "என்னுடைய வம்சத்தினின்றும் ஒருவர் அரபுதேசத்திற்கு அரசராகும்வரை உலகம் அழியமாட்டாது. அவரின் பெயர் என் பெயராகவிருக்கும்" இன்னும், இதே பிரகாரம் மற்றஹதீதுகளிலும் அவர்களின் தகப்பனார் பெயர் அப்துல்லாவாகும்" என்று வந்திருக்கிறது. மிர்ஸாஸாஹிபு இவைகளில் எந்த வகுப்பையும் சார்ந்தவரல்லவென்பதை யாவருமறிவர். அவர் நாமம் குலாம் அஹ்மது, அவரின் பிதாவின் பெயர் குலாம் முர்தஸா வாகும். மிர்ஸாஜீ அரப்தேசத்தில் ராஜீயபரிபாலனம் செய்வது ஒரு புறமிருக்கட்டும். அவ்விடத்தின் யாத்திரைப் பாக்கியங் கூடகிட்டவில்லை. மேலும் காதியானில், மிம்பர் ஸ்தானம் பெறுவதின் பாக்கியமுங் கிடைக்கவில்லை. அவர் கவர்ன்மெண்டில் நின்றும் ஒருவகை டைட்டல் (பட்டம்) பெற்றுக் கொள்வதற்கு மிக்க சிரத்தை எடுத்தார், அன்றியும் தமது ஞான உதிப்பில் (வஹியில்) கௌரவ டைட்டல் கிடைக்குமென்று பிரஸ்தாபித்துக்கொண்டும் வந்தார். எனினும் இவரின் இவ்விஷயங்கள் கவனிக்கப் படவில்லை.

இப்பொழுது சற்று ஆழ்ந்து கவனியுங்கள், ரஸூலுல்லாஹி (ஸல்.) அவர்களின் சந்ததியும் அப்துல்லாவின் குமாரரும் முஹம்மது என்ற பெயரையுடையவரும், அரப் நாட்டின் அரசருமான இமாம் மஹ்தீ (அலை.) அவர்களின் அந்தஸ்து என்ன ? 'முகல்' வம்சத்தைச் சார்ந்தவரும், மிர்ஸாகுலாம் முர்தஸாவின் புதல்வரும் மிர்ஸாகுலாம் அஹ்மது, என்ற நாமமுடையவரும், காதியான் என்ற குக்கிராமத்தின் வாசியுமான இவரின் அந்தஸ்து என்ன ?

(4) மிர்ஸா நபியாகவும், ரஸூலாகவும் ஆக முடியாது. மேலும் ஒருபோதும் முடியாது. ஏனெனின், நபித்துவமும் ரஸூல் தன்மையும் நபிகள் பிரான் (ஸல்) அவர்கள் பேரிலேயே முற்றுப்பெற்று விட்டன. நாயகத்துக்குப் பின் எவரும் நபியாகவும், ரஸூலாகவும் ஆக இயலாது. 'காத்த மன்னபிய்யீன்' என்ற ஆயத்தினால் இவ்விஷயம் ருஜுவாயிருக்கின்றது. தவிர ஸஹீஹ் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம், முஸ்னத் இமாம் அஹ்மத், முதலிய ஹதீதுக் கிரந்தங்களிலே பின்வருமாறு காணப்படுகின்றது. நபிகள்பிரான் (ஸல்.) அவர்கள் நபித்துவத்தின் கட்டடத்திற்கு கடைசிச் செங்கலாக விருக்கிறார்கள், அவர்களுக்குப் பின் (புதிய) ரஸூலாவது நபியாவது உண்டாகமாட்டார்கள்" என்பதாம்.

மேலும்மிர்ஸாகாதியானீ தம்முடையமஸீஹ் என்ற விவாதத்துக்குப் பின்னும் நபித்துவத்தின் வாதத்திற்கு முன்னும் எழுதிக்கொண்டிருந்ததாவது:—நபியுல்லா (ஸல்.) அவர்களுக்

குப்பின் நபித்துவத்தின் தொடர்பும் ரஸூல் தனத்தின் தொடர்பும் கியாமநாள் பரியந்தம் நின்றுவிட்டது" (இஸாலா.) "இன்னும் நான் நபிப்பட்டத்தை வாதாடுகிறேனென்று ஜனங்கள் என்மீது அவதூரைக் கிளப்பிவிடுகிறார்கள். நான் நபித்துவத்தை வாதாடி காபிராகுவதை விரும்புகிறவனா? என்றும் வரைந்திருக்கிறார்.

(5) நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் நமக்குத் தெரிவித்திருக்கிறார்கள் :—"கியாமத்து நாளைக்கு முன் என்னுடைய உம்மத்தென்று சொல்லிக்கொள்ளக் கூடிய ஜனங்களினின்றும் சற்றேறக் குறைய முப்பது மனிதர்கள் தஜ்ஜாலாக விருப்பார்கள் ; அவர்களினின்றும் ஒவ்வொருவரும் நான் நபியென்றும், ரஸூலென்றும் வாதாடுவார்கள்" (ஸஹீஹ்புகாரி முஸ்லிம்). ஆதலின், நாம் மிர்ஸாஜீயை வாக்குச் சொல்லப்பெற்ற மஸீஹென்றும், மஹ்தீயென்றும் நம்பமுடியாது. ஆயினும், நாயகமவர்களுக்குப்பின் நாயகமவர்களின் 'உம்மத்து' என்று கூறிக்கொண்டு நபித்துவத்தைத் தாவாச்செய்த மிர்ஸா காதியானியை நாயகமவர்களின் ஹதீதின் பிரகாரம் நபித்துவத்தைத் தாவாச்செய்த முப்பது பொய்யர்களான தஜ்ஜால்களில் ஒருவரென்று கூறல் சாலவும் பொருந்தும். "தஜ்ஜால்" என்ற பதத்தின் அர்த்தமாவது ;—"ரொம்ப ஏமாற்றி காரியத்தை மேல்நடத்தி செல்பவனாகும்" "கத்தாப்" என்ற பதத்தின் அர்த்தமாவது;—"ரொம்ப பொய்சொல்பவனாகும்" இந்த இரண்டு விஷயங்களும் மிர்ஸாஜீ காதியானியிடத்தில் முற்ற முற்ற இருந்துவந்தது. ஏமாற்றுவதும், வார்த்தைகளை உண்டுபண்ணிப் பேசுவதும், பொய்சொல்வதும் மலிந்திருந்தது.

### மேற்குறிப்பிட்டுள்ள விஷயத்தின் சாராம்சம்.

ஈஸா நபி (அலை.) சிலுவையிலறையப்படவுமில்லை, கஷ்மீர் தேயத்திற்குப் போகவுமில்லை, அங்கு போய் இறந்துபோகவுமில்லை. ஆயினும் அல்லாஹுதஆலா தன் வல்லமையினாலும், பூரண ஞானத்தினாலும் ஜீவனோடு வானத்தின் பேரில் உயர்த்திக் கொண்டான். ஈஸா நபியவர்கள் கடைசிக் காலத்தில் இப்பூவுலகில் இறங்குவார்கள். ஹஜ்ஜுசெய்வார்கள் மதீனா ஷரீபில் இறந்து நாயகமவர்கள் பக்கத்தில் அபூபக்கர் (ரலி.) உமர் (ரலி,) ஆகியோர்களின் சமாதிக்கிடையில் அடக்கப்படுவார்கள். அதாவது, அந்த இடம் அவர்களின் கப்ர் கோரிக்காகவே இன்றளவும் காவல் செய்யப்பட்டிருக்கின்றது. இந்த நான்கு கபர் கோரிகளைத் தவிர்த்து 5-வது கோரிக்கு அவ்விடத்தில் எவ்வகையான சமாச்சாரத்துக்கும் இடமுமில்லை. எனவே, மிர்ஸா குலாம்அஹ்மது மஸீஹுமல்ல, மவ்ஊதும் அல்ல. இமாம் மஹ்தியும் அல்ல. நபியும் ரஸூலுமல்ல, என்றாலும் நபிகள் நாயகத்தின் ஹதீதிற்கேற்ப நபித்துவத்தை வாதாடும் முப்பது புளுகர்களில் ஒருவராக இருக்கும்.

### பூரண எச்சரிக்கை

இச்சிறு வியாசத்தில் யாம் குர்ஆனைக் கொண்டும், ஹதீதைக்கொண்டும் தக்க ஆதாரத்தோடு எல்லாவிஷயங்களையும் எடுத்தியம்பிவிட்டோம். இனிமேல், விவேகமுள்ள ஆண்பெண்களான உண்மை முஸ்லிம்களுக்கு எவ்வகையான சந்தேகமோ, தடுமாற்றமோ ஏற்படுவதற்கு இடமில்லை. முப்பது தஜ்ஜால்களும் பொய்யர்களும் தோன்றி நபிப்பட்டத்தைப்பற்றி பொய்யாக வாதாடி தந்திரோபாயங்களால் மக்களை ஏமாற்றி மிரளச்செய்வார்கள் என்னும், நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களின் ஹதீதிற் கேற்ப மிர்ஸாஜீ இந்த வேலையை மட்டிலும் மிகத் திறமையாகப் பூர்த்திசெய்துவிட்டார். இப்போது அவருக்குப் பின் அவருடைய ஏமாற்றத்தில் சிக்கிக்கொண்ட சில ஜனங்கள் பாமர பொதுமுஸ்லிம்களான ஆண்பெண்களை அவரின் நோக்கம் நிறைவேறும்படியான விதத்தில் குர்ஆன் ஹதீதுகளின் கருத்துகளைத் திரிபுபடுத்தி தவறுதலில் ஆழ்த்திவருகின்றனர். அவர்களின் ஏமாற்றங்களையும், தவறுகளையும் பகிரங்கப்படுத்தி முஸ்லிம்களான ஆண்பெண்களை அவர்களின் மாயவலையைவிட்டும் தப்புவிப்பதற்காக இவ்வியாசம் அவசியமாய் எழுதப்பட்டது.

இஸ்லாமிய தலைவர்களே! பெரியார்களே!
வாலிபவீரர்களே!

நுங்களது பரிசுத்த இஸ்லாத்தை தலைகீழாக புரட்டி பல நூதன குப்ரு, ஷிர்கான விஷயங்களை கலந்து பொதுமக்களிடையே பிரசாரஞ்செய்யும் இக்குழாத்தினரை எதிர்த்து எப்பொழுதுதான் பொதுமக்களுக்கு உண்மையை உணர்த்தப்போகின்றீர்கள்? ஆதலின், இன்றே எழுங்கள்! நுங்கள் கடமையைச்செய்யுங்கள்!!

# ஹஸ்ரத் இமாம் அஃலம் (ரஹ்)

சங்கைவாய்ந்ததங்களது திருநாமம் நுஃமான். காரணப்பெயர் இமாட் அஃலம். இடுகுறிப்பெயர் அபூஹனீபா என்பதாகும். ஹஸ்ரத் அவர்களின் தந்தையாகிய 'தாபித்'என்பவர்கள் கூபாவின் பிரக்யாதிபெற்ற வியாபாரியாகவும் முக்கியஸ்தர்களின் தலைவராகவுமிருந்தார்கள்.

### ஆரம்ப சம்பவம்

ஹஸ்ரத் அவர்கள் ஹிஜ்ரீ 80-ம் ஆண்டு ஷஅபான் மாதத்தின் அதிகாலையில் கூபாவில் ஜனனமானார்கள். ஆரம்பமுதல் கூறிய அறிவாற்றலுள்ளவர்களாயும் பொறுமை சாலியாகவும் இனியமொழி புகல்பவர்களாகவுமிருந்தார்கள். மகான் அவர்களின் அரும் மாதா கெர்ப்பவதியாக இருந்தகாலை, தம் அறையில் சூரியன் உதயமாகி அதன் சுடர் கூபாவின் மதிற்சுவர் அடங்கலையும் பிரகாசிக்க செய்வதுபோல் கனவு கண்டார்கள். உடனே அம்மாது அக்கனவை அருந்தந்தை அவர்களிடம் தெரிவித்தபோது அவர்கள், உன்வயிற்றில் தூய்மை பொருந்திய ஓர் ஆலிம் இருக்கிறார் ; அவரது கல்வியின் காரணமாக முஸ்லிம் உலகமே ஜெயமடைந்து விளங்கும் என அறிவித்ததாக சரித்திராசிரியரான தஹபீ அவர்கள் ஹஸ்ரத் ஆமிறுப்னுதாபித் அவர்களைத் தொட்டும் ரிவாயத்துச் செய்திருக்கிறார்கள். இக்கனவின் கருத்து மேற்கூறியவாறே சரியான முறையிலேயே நடைபெற்றுவந்தது.

### வெளித் தோற்றம்

ஹஸ்ரத் அவர்கள்வஸீகரத்தோற்றமுடையவர்களாகவும், அழகுபொருந்தியவர்களாகவும், கண்விழி பெருத்தவர்களாகவும், அகண்ட நெற்றியையுடையவர்களாகவும், நடுத்தரஉயரமுடையவர்களாகவும், சிவப்போடு கூடிய வெண்மை நிறமுடையவர்களாகவும், உயர்ந்த அழகிய தொனியுடையவர்களாகவும், ஏதாகிலுமொரு விஷயத்தை ஒருமுறை காதில்கேழ்ப்பார்களாகில் அதனை மனதிலிறுத்திக் கொள்பவர்களாகவுமிருந்தார்கள்.

### கல்வி சீர்திருத்தம்

ஹஸ்ரத் அவர்கள் சிறுபால்யம் முதல் 16 ஆண்டுகள்வரை பற்பலபாகங்களிலும் அனீதி அதிக்கிரமம் கொள்ளை முதலியவை நடைபெற்றுக் கொண்டு காலத்தின் போக்கு ஒழுங்காகயில்லாததால் ஹஸ்ரத் அவர்களுக்கு கல்வி கற்றுக்கொள்ளும் சந்தர்ப்ப மேற்படாதிருந்தது. பின்னர் ஹிஜ்ரீ 96-ம் ஆண்டில் 'சுலைமான் பின் அப்துல்மலிக் என்பவர் சிம்மாசனம் ஏறியவுடன் பலவாறு நடைபெற்றுவந்த அநீதி அக்கிரமங்களெல்லாம் நீக்கப்பட்டுப் போகவே, ஹஸ்ரத்அவர்களுக்கு கல்வி கற்கவேண்டுமென்னும் அவா மேலிட்டது. எனவே, உடனே ஹஸ்ரத் அவர்கள் அதிலீடுபட்டு ஆரம்பமாக குர்ஆன் ஷரீபை மனனஞ் செய்ய ஆரம்பித்தார்கள். பின்னர் பிக்ஹு, ஹதீது, தப்ஸீர், அகாயித் முதலிய கலாஞானத்தை நெகிரற்றகியாதியோடு சிறந்து விளங்கிய ஹஸ்ரத் ஹம்மாது (ரலி) அவர்களிடம் பூர்த்திசெய்தார்கள். ஹஸ்ரத் அவர்கள் தங்கள் உஸ்தாதாகிய ஹம்மாது (ரலி) அவர்களுக்கு அளவற்ற சங்கை மரியாதை செய்து வருவதற்கிடையே உஸ்தாது அவர்கள் மரணமாகும்வரை அவர்கள் வீட்டின் பக்கல் தங்கள் காலைக்கூட நீட்டாதவர்களாக விருந்தார்கள்.

### நற்குண நல்லொழுக்கம்

ஹஸ்ரத் இமாம் அவர்கள் நெகிரற்ற சற்குண சாந்தராகவும் தயாளகுண வள்ளலாகவுமிளிர்ந்து விளங்கினார்களாதலின் ஏழைகள்மீது பிரத்தியேக அன்பு கொள்பவர்களாகவும், அவர்களின் கஷ்ட சங்கடங்களில் பங்கெடுத்துக் கொள்பவர்களாகவும், அவர்களுக்குத் தொண்டுபுரிபவர்களாகவு மிருந்து வந்தார்கள். இந்நிலைமையில் ஹஸ்ரத் அவர்கள் உலகின் கெவர்தி ஆசாபாசம் முதலியவைகளை அற்பமாக மதித்துவந்தார்களாதலின் சீமான் ஏழை என்னும் வித்தியாசம் பாராட்டாது யாவருடனும் சமமாக நடந்துகொள்பவர்களாக இருந்தார்கள். யாரிட மிருந்தாகிலும் எவ்வாறான சன்மானம் வந்தபோதிலும் அதனை ஏழைமாணவர்களுக்கு அளிப்பவர்களாகவும், சாப்பாட்டிற்கு உட்காருங்கால் அயல்பாகக்காரர்களில் ஏழைகளாயுள்ளவர்களின் நிலைமையை விசாரித்து அவர்களில்யாராவது பசியாக இருப்

பார்களாயின் தங்கள் சாப்பாட்டை அவர்களுக்குக் கொடுப்பவர்களாகவு மிருந்தார்கள்.

### பிரத்தியேக விசேஷம்

ஹஸ்ரத் அவர்களின் அறிவு ஆற்றல் பிரத்தியேக விசேஷம் பொருந்தியதாக இருந்ததால் உறுதியான நிர்ணய முடையவர்களாகவும் ஆழ்ந்த சிந்தனைக்குப் பின் தீர்மானத்திற்கு வரும் விஷயங்கள் மீது கடைசிவரை உறுதியுடனிருப்பவர்களாகவும், மனக்கவர்ச்சியை அளிக்கும் பிரசங்கம் புரிபவர்களாகவும், சொற்சுருக்கம், கருத்து மிகுதமாயுள்ள இன்மொழிகளை இன்பமுடன் உபயோகிப்பவர்களாகவு மிருந்தார்கள்.

### வணக்கத்தின் சுவை

ஹஸ்ரத் அவர்களுக்கு ஆரம்பமுதல் வணக்கத்தின்மீதும் அல்லாஹ் தஆலாவின் படைப்புகள் மீது கவனத்தைச் செலுத்துவதிலும் அதிகப் பிரீதி ஏற்பட்டிருந்ததால் ஒவ்வொரு நாளும் நடு இரவில் விழித்தெழுந்து முக்கியத் தேவைவைகளை முடித்துக்கொண்டு நந்நீராடி பயம் அச்சத்தோடு தஹஜ்ஜுத்தொழுகையை நிறைவேற்றிவிட்டு அல்லாஹ் தஆலாவை தியானிப்பதிலீடுபட்டு விடுவார்கள். எப்பொழுதாகிலும் வெளியிற் பிரயாணஞ் செய்வார்களாயின் தங்கள் கூடாரத்தின் வாசற்படி மீது திரைபோட்டுக்கொண்டு 200 ரக்கஅத்து நபில் தொழுகையை நிறைவேற்றுவார்கள். இவ்வாறு அநேக நேரங்களில் இஷாதொழுகைக்குச் செய்த ஒளுவைக் கொண்டு பஜர் தொழுகையை நிறைவேற்றி யிருக்கின்றார்கள்.

### மக்கா யாத்திரை

ஹிஜ்ரீ 106-ம் ஆண்டில் ஹஸ்ரத் அவர்கள் தங்கள் சிநேகிதர்களிற் சிலருடன் மக்கா முஅல்லமா சென்றார்கள். அதுபொழுது அந்நகரில் கல்வி போதனமுறை தலைசிறந்து விளங்கியது. கல்வி விற்பன்னர்களான மகான்களின் போதனசாலைகள் பல தனித்தனியே அமைக்கப்பட்டிருந்தது. ஹஸ்ரத் அவர்கள் அங்குஹதீதுக்கலையில் பிரக்யாதி பெற்று விளங்கிக்கொண்டிருந்த 'அத்தாபின் அபீரவாஹு' (ரஹ்.) அவர்களிடம் அக்கலைகளின் முக்கியாம்சங்களைத் தெரிந்துகொண்டார்கள். மகான் அவர்களின் கல்வித்திறமையும் பாண்டித்துவமும் பிரக்யாதி பெற்று விளங்கிக் கொண்டிருந்தது. ஹஜ்ஜுக் காலத்தில் "ஹஸ்ரத் அவர்களைத் தவிர வேறு எவருக்கும்மார்க்கத்தீர்ப்பளிக்கும் பாத்தியதை கிடையா" தென்று ஹிஜாஸ் கவர்ன்மெண்டாரால் உத்திரவு பிறப்பிக்கப்பட்டு வந்தது.

ஹஸ்ரத் இமாம் அவர்கள் ஹதீதுக் கலையில் தேர்ச்சிபெற்றபின் மதீனா முன்னவரா சென்று ஹஸ்ரத் சாலிம்பின் அப்துல்லா (ரலி.) அவர்களிடம் குர்ஆன் ஷரீபின் உயர்ந்த கருத்துக்களையும் மகாத்மியங்களையும் தெரிந்துகொண்டார்கள். சுமார் ஆறுவருடகாலம் இச்சேவையிலீடுபட்டபின் ஹஸ்ரத் அவர்கள் கூபாவுக்குச் சென்று இஸ்லாமியப் பிரசாரத்திலும், மாணவர்களுக்குக் கல்வி புகட்டுவதிலும் ஈடுபட்டார்கள். தங்கள் பிரசங்கம் மனக்கவர்ச்சியையும் ஆத்ம சாந்தியையும் அளிக்கக் கூடியதாக இருந்ததால், அநேக பிரசங்கசபைகளுக்கு யூத கிறிஸ்துவ மக்களிலனேகர் சமுகங்கொடுப்பவர்களாக இருந்தார்கள். எனவே ஹஸ்ரத் அவர்களின் அழகான முயற்சியின் பயனாக யூதர் கிறிஸ்தவர்களிலிருந்து 300 நபர்கள் வரை இஸ்லாத்தைத் தழுவிக்கொண்டதாக ஹஸ்ரத் இமாம் அபூஈஸுப் (ரஹ்.) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

### இமாம் முஹம்மதுபாகிர்

ஒருநாளன்று ஹஸ்ரத் இமாம் அபூயூசுப் (ரஹ்.) அவர்கள், ஹஸ்ரத் இமாம் முஹம்மது பாகிர் (ரஹ்.) அவர்களிடம் சென்றார்கள். அதுபொழுது இமாம்பாகிர் அவர்கள், இந்த அபூஹனீபா என்னும் பெரியார்யார்? அவர்கள் இஸ்லாமியபோதனைகளை புதியதோரணையில் விவரிப்பதாகவும், உலமாக்களின் அபிப்பிராயங்களை அங்கீகரிப்பதில்லை என்றும் கேள்விப்படுகிறேனே, எனத் தெரிவித்தார்கள். அதற்கு அபூயூசுப் (ரஹ்.) அவர்கள் அம்மகான் தேர்ச்சிபெற்ற கூர்மையான அறிவாற்றலுள்ளவர்களாக இருப்பதால் மார்க்க சம்பந்தமான ஒவ்வொரு விஷயத்தையும் வெகு சுளுவாக மக்கட்கு எடுத்துக் காண்பதில் தேர்ச்சிபெற்றிருக்கிறார்கள் என்று கூறிவிட்டு, இமாம் அவர்களின் வார்த்தைகளில் சிலவற்றை விளக்கினார்கள். இதனை செவியுற்ற இமாம்பாகிர் அவர்கள், அவர் நிகரற்ற அறிவாற்றலுள்ளவராகத் தெரிகிறது, யான் இதுகாலைவரை அவர்மீது கெட்ட எண்ணம் வைத்திருந்தேன்; இதுபொழுது அவருடைய அறிவாற்றலானது மானிடர்களை வசப்படுத்திவிட்டதெனக் கருதுகின்றேன், எனப் புகழ்ந்து கூறினார்கள். அதேகாலத்தில்தான்



ஹஸ்ரத் இமாம் அபூஹனிபா (ரஹ்.) அவர்கள் மதீனமாநகர் வந்தடைந்து ஹரஸ்த் இமாம் பாகிர் (ரஹ்.) அவர்களைச் சந்தித்தார்கள் உடனே ஹஸ்ரத் பாகிர் அவர்கள் இமாம் அவர்களை நோக்கி, மன்னிக்கவேண்டும், தாங்கள் ஹதீதுக்கு மாற்றஞ்செய்கிறீர்களென்று யான் கருதியதால் ஒரு சிலகாலமாக தங்கள்மீது எனக்குக்கெட்டஎண்ணம் ஏற்பட்டுப்போயிருந்தது. ஆனால் இதுபொழுது யான் தங்களைச் சந்தித்ததால் தாங்கள் நெகிரற்ற புகழுக்குறிய அறிவாற்றலுள்ளவர்களென்பதைத் தெரிந்து கொண்டேன், அல்லாஹ் தஆலா தங்களுக்கு மேலான பதவியளிக்க வேண்டுமெனப் பிரார்த்திக்கிறேன் எனக் கூறினார்கள்.

### போதன சபை

ஹிஜ்ரீ 109-ம் ஆண்டு ஷவ்வால் மாதம் முதல் ஹஸ்ரத் அவர்கள் மாணவர்களுக்கு சட்டதிட்டத்தோடு கல்வி போதிக்க ஆரம்பஞ் செய்தார்கள். இராக், ஷாம் தேசத்து மாணவர்கள் ஹஸ்ரத் அவர்களின் தீக்ஷண்ய அறிவாற்றலை அறிந்திருந்தார்களாதலின் ஆயிரக்கணக்கான மாணவர்கள் கல்வி தாகங்கொண்டவர்களாய் ஹஸ்ரத் அவர்களின் கல்வி சபைக்கு திரள்திரளாக வந்து கூட ஆரம்பித்தார்கள். மக்கா முஅல்லமா, மதீனா முனவ்வரா, பஸரா, திமஷ்க், எமன், பக்தாத், நைஷாபூர், சமர்கந்து முதலிய முக்கிய பட்டணங்களிலுள்ள மாணவர்களில் 1100 நபர்கள்வரை தங்களின் மேலான போதனையால் பிரயோசனமடைந்தார்கள். அதில் முக்கியமாக இமாம் அபூயூசுப் (ரஹ்), இமாம் முஹம்மது (ரஹ்.) இவர்களுக்கு மேலான அந்தஸ்து கிடைத்தது.

### ஹஸ்ரத்ஸுப்யானதவ்ரீ

ஹஸ்ரத்ஸுப்யானதவ்ரீ (ரஹ்.) அவர்கள் ஒரு பிரக்யாதிபெற்ற கல்விவள்ளலாக இருந்ததுடன் நெகிரற்ற பிரசங்கியாகவுமிருந்தார்கள். ஒருநாள் எமன் வியாபாரி யொருவர் ஹஸ்ரத் அவர்களிடம் வந்து இன்று எனக்கும் என் மனைவிக்குமிடையில் தர்க்கமேற்பட்டு, "நீ என்னிடம் பேசாமலிருக்கும் வரை யான் உன்னிடம் பேசமாட்டேன்" எனப் பிரயாணஞ் செய்து கொண்டேன். அவளும் சத்தியஞ் செய்து இவ்வாறே கூறிவிட்டாள். அதனால் இதுபொழுது மனத்திற்கு பெரும் கவலையாக இருக்கிறது. அதற்காக இதுபொழுது யாது செய்வதென்பதைத் தெரிவிக்குமாறு கோருகிறேன், எனக்கேட்டுக் கொண்டார். இதனைச் செவியுற்ற ஹஸ்ரத் ஸுப்யானதவ்ரீ (ரஹ்.) அவர்கள் சத்தியத்திற்கு பரிகாரஞ்செய்யாமல் யாதொரு காரியமும்செய்யமுடியாது, என்று தெரிவித்துவிட்டார்கள். அந்த எமன்வாசி ஆதரவு அற்றவனாகி ஹஸ்ரத் இமாம் அபூஹனீபா (றஹ்.) அவர்களிடம் சென்று நடைபெற்ற சம்பவங்கள் முழுவதையும் விபரமாகத் தெரிவித்துக்கொண்டார். உடனே ஹஸ்ரத் அவர்கள் அம்மனிதரை "நோக்கி உன் பெண்ஜாதியிடம் சென்று சந்தோஷமாக கலந்துறவாடும், கப்பாறுக் கொடுக்க வேண்டிய அவசியமில்லை" என அறிவித்தார்கள். ஹஸ்ரத் ஸுபானதவ்ரீ அவர்களுக்கு இவ்விஷயம் தெரிந்தவுடன் உடனே ஹஸ்ரத் அவர்களிடம் சென்று நீர் குர்ஆன் ஹதீதுக்குவிரோதமாக தீர்ப்பளித்திருக்கிறீர், எனக் கடிந்துபேசினார்கள். உடனே ஹஸ்ரத் இமாம் அவர்கள் அந்த எமன் வியாபாரியை அழைத்து நடைபெற்ற சம்பவ நிகழ்ச்சிகள் முழுவதையும் நன்றாக விசாரித்து, யான் ஏற்கனவே கூறியவையே இதுபொழுதும் கூறுகிறேன், என அறிவித்தார்கள். அதுபொழுது ஹஸ்ரத் சுப்யானதவ்ரீ அவர்கள் அவ்வாறு தீர்ப்புச் செய்வதெப்படி, என வினவினார்கள். அதற்கு இமாம் சாஹிப் கூறியதாவது: "—நீ பேசாதிருக்கும் வரை யான் பேசமாட்டேன்" என புருடன் அறிவித்தவுடன் அதற்கு பதிலாக நீ 'பேசாதிருக்கும்வரை யானும் பேசமாட்டேன், என அவள் கூறினாள். பெண்சாதி இவ்வார்த்தையை மொழிய ஆரம்பிக்கும் போதே அவள் பேசுவதற்கு ஆரம்பித்துவிடுகிறாள். ஆதலால் சத்தியம் எங்கிருக்கிறது? எதற்காக கப்பாறுக் கொடுக்க வேண்டும்? என அறிவித்தார்கள். இதனைச்செவியுற்ற ஹஸ்ரத் ஸுப்யான் அவர்கள் தங்கள் அறியாமைக்கு வருந்தி துக்கப்பட்டார்கள்.

### மரணம்.

இவ்வாறு மேன்மையோடு சிறந்து விளங்கிய ஹஸ்ரத் அவர்கள் ஹிஜ்ரீ 150-ம் ஆண்டு ஷபான் மாதம் 11-ந்தேதியில் அல்லாஹ்வின் கூப்பிடுதலை அங்கீகரித்துக் கொண்டார்கள். இன்னாலில்லாஹிவயின்னா இலைஹி ராஜிஊன் அவர்களது கபர்ஷரீப் பக்தாத் பட்டணத்திலிருக்கிறது.

---

# சுகாதாரம் - ஆரோக்கியம்

ஆரோக்கியம், சுகாதாரம் இவைகள் சம்மந்தமான விதிகள் அநேகமுண்டு. இவற்றுள் மானிடர்களுக்கு மிகவும் முக்கியமானவை மூன்று. ஆகவே ஒவ்வொருவரும் தன் ஆரோக்கியத்தைக் காப்பற்றவேண்டுமாயின் இம்மூன்று கொள்கைகளையும் கைகொள்ளவேண்டும். ஆனால் இவைகள் சுலபமானவைகளாகயிருப்பதுடன் மிகமிக முக்கியமானவைகளுமாகும். இவைகளில்ஏதாகிலுமொன்றைமீறி நடந்தால் தக்ஷணமே கெடுதல் நேரிடாவிட்டாலும் நாளாவட்டத்தில் அவன் ஆரோக்கியம் குன்றிவிடும்; இவைகளைச் செவ்வையாய் கவனிப்பது கொண்டு நல்ல ஆரோக்கியத்திலிருக்கச் செய்யும். இதுவிஷயம் ஆரோக்கிய மற்றவர்களுக்குத் தெரிந்திருந்தபோதிலும், அவற்றை இங்கு எடுத்துரைப்பது பிரயோசனமற்றதாகாது. மழையில் நனைந்து அடிபட்டு வந்தவனுக்கு நெருப்பை விசிறி ஜ்வலிக்கச் செய்வது எவ்வளவு அவசியமோ அவ்வளவு இதுவும் அவசியமாகும். ஆகவே (1) எப்போதும் சுத்தமாக இருப்பது (2) மிதமாய் உண்பது (3) சுத்தமான காற்றும் சூரியவெளிச்சமும் இருக்கும்படி செய்தல் ஆகிய இம்மூன்றையும் எப்போதும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும்.

மானிடன் தனது தேகத்தையும், மனதையும் சுத்தமாகவைத்துக் கொண்யுருக்கவேண்டும் என்னும் வாக்கியத்தில், சுகாதாரத்திற்குறிய எத்தனையோ விஷயங்கள் அமைந்திருக்கின்றன. (1) தேகசுகத்தில் சம்பந்தப்பட்டவை: தினம் ஸ்நானஞ் செய்தல், சுத்தமான தகுந்த ஆடைகளை உடுத்தல், தக்கபடுக்கைகளை உபயோகித்தல், மலச்சிக்கலில்லாமல் குடலை சரியாய் வைத்துக் கொள்ளல், அழுக்கான வஸ்துக்களை உபயோகியாதிருத்தல், வாய், பற்கள், நகங்கள் இவைகளை சுத்தமாய்வைத்திருந்தல் ஆகிய இவைகளே. (2) மனோ சுகாதாரம் யாதெனில்: மனோசஞ்சலம், பயம், துக்கம் ஏமாற்றம் இவைகள் வரவொட்டாமல் தடுத்தலேயாகும். இவை யாவும் மானிடனது சுகத்தைக் கெடுத்து விடுவதால் அவனுடைய ஆரோக்கியத்திற்கு தீங்கு நேரிட்டு விடுகிறது.

சுகாதாரம் என்பது வியாதிகளைத் தடுத்து, ஆரோக்கியத்தை அபிவிர்த்தி செய்வதாகும். மனோ சுகாதாரமானது தேக சுகாதாரத்திற்குச் சம்பந்தப்பட்டதாயிருப்பதால் மனதிற்கு ஏதாகிலும் கவலை ஏற்பட்டால் தேகாரோக்கியத்திற்கு கெடுதலுண்டாய் விடும். ஆனது பற்றி தேகம் ஆரோக்கியமான ஸ்திதியில் இருக்கவேண்டுமாயின் மனதில் கவலை இருக்கலாகாது. சகல வியாதிகளுக்கும் மனோசஞ்சலம் அடிப்படையாக இருக்குமாதலால் கூடிய சீக்கிரம் அதனைத் தடுக்கவேண்டும்.

“ஆகாரம் இல்லாமல் மரணமாவதைக் காட்டினும் அநேகர் அதிகமாய் உண்டு சாகிறார்கள்” என்ற மூதுரை யாவருக்கும் தெரிந்ததே. ஆகவே அதிகமாய் உண்பது பெருந்தீங்கை, கேட்டை விளைவிப்பதாகும். ஆகாரத்தை தகுந்ததாய்த்தெரிந்தெடுப்பது ஓர் முக்கிய விஷயம். ஆரோக்கியத்தைப் பாதுகாக்கவேண்மானால் போஷணையுள்ளவஸ்துக்களையே மிதமாய்ச் சாப்பிட வேண்டும். அளவுக்கடந்து ஆகாரம் உண்பதனால் இரப்பை, கல்லீரல், நாடிக்குழாய்கள் இவைகள் சம்பந்தமான வியாதிகள் உண்டாகும். ஆகாரமானது தேகத்திற்கு வலுவையும் போஷணையையும் கொடுப்பதற்குப் போதுமானதாக இருக்கவேண்டும். எனவே புஷ்டிச்சத்து, கொழுப்புச்சத்து முதலியவைகள் கலந்ததாயும் அசத்து சரிசமமான எடையுள்ளதாயுமிருக்கவேண்டும். ஆகவே, ப்ரோடின் அதிகமாக விருந்தால், அவ்வஸ்த்து வயிற்றில் அழுகிப்போகும்; கார்போஹைட்ரேட் அதிகமாக விருந்தால் அது புளித்துப்போகும். கொழுப்பு அதிகமாகவிருந்தால் உப்பஸம் உண்டாகும். சாதாரணமாய் நாம் போதுமான அளவு சாப்பிடுகிறோம். சில சமயங்களில் அளவுகடந்தும் சாப்பிடுகிறோம். ஆனால் ஆகாரத்தின் போஷணை குணத்தைக் குறித்துக் கவனிக்கிறதில்லை. அதனால் அஜீரணம் உண்டாகி, அதுவே அநேகவித வியாதிகளுக்கு ஆஸ்பதமாகிறது.

சுத்த காற்று நமது ஆரோக்கியத்திற்கு அத்தியாவசியமானதாக விருப்பதால் அதை அடைவதற்கு ஒவ்வொருவரும் முயற்சிக்க



வேண்டும்; நெருக்கடியான இடங்களிலுள்ள கெட்ட காற்றைத் தவிர்க்கவேண்டும்; திறந்த இடத்தில் படுத்துறங்க எப்போதும் முயலவேண்டும். ஆனால் குளிர்ந்த காற்று படவொட்டாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். ஆகவே (1) தூசியை சுவாசத்துடன் உட்கொள்ளலாகாது, (2) தேகத்தை நன்றாய் தேய்த்து ஸ்நானஞ் செய்யவேண்டும், (3) சாப்பிடுமுன் கைகளைக் கழுவவேண்டும், (4) பற்களை ப்ரஷ் (மிஸ்வாக்) கொண்டுசுத்தம்செய்யவேண்டும்; (5)நகங்களைக் கடிக்கலாகாது; (6) வெளிக்காற்றில்விளையாடவேண்டும். இவ்வாறான விஷயங்கள் சுகாதாரத்திற்கு இன்றியமையாச் சாதனங்களாகுமாதலால் மானிடர் இவைகளைக் கவனத்தில் வைத்தல் மிகமிக அவசியமானதாகும். ஆரோக்கியம் மானிடனது ஜன்ம சுதந்தரமாகும். ஒருவன் தான் செய்யும் துர்க்கிருத்தியங்களுக்கு எவ்வளவு ஜவாப்தாரியோ அவ்வாறே அவன் அசௌக்கிரியத்திற்கும் ஜவாப்தாரியாவான். எந்த ஜனங்கள் தங்கள் தேகங்களை இஷ்டப்படி நடத்தி, தங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டிய தேகாரோக்கிய விதிமுறைகளை மீறிநடக்கிறார்களோ அவர்கள் தேகப்பாவிகள். அவர்கள் தங்களுக்கு விரோதமாகவே ஒரு குற்றத்தைச் செய்வதுடன், தங்களைச் சேர்ந்தவர்களுக்கும், பின்னால் வரப்போகிற தங்கள் சந்ததியார்கட்கும் விரோதமாகவே குற்றத்தைச் செய்கிறார்களென்றே கருதவேண்டும். சுகஜீவியாக வாழவேண்டுமானால் சுகாதார விதிகளை அனுசரிக்கவேண்டும்; அப்போதுதான் நமது வாழ்வு திவ்வியமானதாகவிருக்கும்.

வியாதிப்படுவது ஓர் அவமானம்; அது தேகபலஹீனத்தை மட்டுமின்றி மனோதிடமின்மையையும் காட்டும். இந்த எச்சரிக்கைகள் முக்கியபிரதானவைகளென்று கவனியாது சட்டங்களை மீறி நடப்போமானால் நம்மை வியாதி எதிர்க்கிறது. இளம் வயதில், எதிர்க்கும் சக்தி அதிகமிருப்பதால் அநேக வியாதிகளை ஜெயிக்கலாம். ஆனால் வயது செல்ல செல்ல, எதிர்க்கும் சக்தி கம்மிப்பட்டு, மெதுவாய், கள்ளத்தனமாய் அநேகவிதமான வியாதிகள் தோன்றுகின்றன.

## ஆகாரம்

நாற்பது அல்லது நாற்பத்தைந்து வயது ஆனவுடனே ஒருவன் தன்னுடைய ஆகாரத்தை மிகவும் குறைத்துக்கொள்ள வெண்டியது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டிய தவசியமாகும். அதன் அளவு எவ்வளவு? அதன் குணம் என்ன? என்பவைகளை ஒவ்வொருவருடைய தேவைக்குத் தக்கப்படி அதாவது அவருடைய தொழில், அவர் செய்யும் வியாமங்கள் இவைகளைக் கவனித்துத் தீர்மானிக்கவேண்டும். கார்ப்போஹைட்ரேட்டுகளையும் கொழும்புள்ள பதார்த்தங்களையும் வெகுவாகக் குறைக்கவேண்டும்.

## சுத்தமான காற்று

சரியானபடி சுவாசித்தல் முக்கியம் என்பதை இங்கு வற்புறுத்தவேண்டிய அவசியமில்லை. ஆரோக்கியத்திற்தி சுத்தமான காற்று அவசியம் என்பதையும், அந்தகாற்றினால்சுவாச சம்மந்தமான வியாதிகள் வரவொட்டாமல்தடுக்கலாம் என்பதையும் அநேகம்தரம் சொல்லக் கேட்டிருக்கிறோம். நாம் தினம் ஒருதரமோ அல்லது இரண்டுதரமோ பிராணாயாமம்செய்து நுரையீரல்களைச் சுத்தகாற்றைக்கொண்டு சுத்தம்செய்யவேண்டும்.

## தாடியின் உபயோகம்

டாக்டர் சாரல்ஸ் ஹூபர், கவர் டி. அலீனி, ஐடாஹோ, அமெரிக்கா, பின் வருமாறு எழுதுகிறார்:—தாடியை ஒழிப்பதற்கு மின்சார ஊசியை உபயோகிக்கலாமென்றும், அதனால் க்ஷவரம்செய்து கொள்வதற்குப் பிடிக்கும் நேரத்தை மீற்றலாமென்றும் ஒரு நிருபர் சிபார்சு செய்றார்.

அந்நிருபர் தாடியைப்பார்த்து என் இவ்வளவு திகில் அடையவேண்டும்? மனிதர்கள் தலையின்மேல் மயிரை வளர விடுகிறார்கள்; அதை முகத்தின்மேல் வளரவிட்டால் என்ன? தலையில் ஏதாகிலும் ஒரு பாகத்தில் மயிர் இல்லாமல் இருந்தால், அது அவனுக்கு அவமானமாக இருக்கிறது. ஆகிலும், அவன் முகம் முழுவதையும் மொட்டையாக்கி விட்டு, மானமில்லாமல் ஆண்மைத்தனத்திற்கு அடையாளமாயிருக்கிற தாடியையும் ஒழித்துவிடுகிறான்.

தாடி அல்லது மீசையிருந்தால், அதனால் வலிவு, நற்குணம், தனிமையான அழகு, முகத்திற்கு பெருமை முதலியன உண்டாகும்; மனிதனுக்கும் ஸ்திரீக்கும் உள்ள வித்தியாஸத்தைக் குறிக்கும். ஸ்திரீகளுக்கு மனப்பூர்வமாக ஆண்களின் மீசையின்பேரிலும், தாடி

யின் பேரிலும் பிரியம் அதிகம். மிருதுவான முகத்தையுடைய புருஷர்களைக் காட்டிலும், தாடிவைத்துக்கொண்டிருக்கும்மனிதர்களை இரகஸ்யமாய் மெச்சி கௌரவப்படுத்துகிறார்கள். ஆனால் சிலர் தாடியையும் மீசையையும் அருவெறுப்பதற்குக் காரணம், தாடியைத்தள்ளிவைத்திருக்கும் நாகரீகத்திற்கு அவர்கள் அடிமையாயிருப்பதே. நாசித்துவாரங்கள், வாய் இவைகளைச்சுற்றி மயிர் இருந்தால், அது கெடுதலையான தூசையையும் விஷக்கிருமிகளையும் உள்ளே நுழையவொட்டாமல் தடுக்கும். தாடியானது ஜலதோஷம் பிடிக்கவொட்டாமல் தொண்டையைக் காற்கிறது.

மீசையும் தாடியும் மறுபடியும் தம் நிலைமைக்கு வந்துகொண்டு இருக்கின்றன. அவை வந்ததும், ஸ்திரீகளின்மேல் புருஷர்களுக்குள்ள அதிகாரமும் பழையபடி வந்துவிடும். தாடிவைத்துக் கொண்டுள்ள புருஷனை அவன் மனைவி விவாகரத்து செய்யத் துணிந்ததில்லை. தாடியுள்ள மனிதன், அதற்குத் தக்கபடி கௌரவத்துடன் வாழ முயற்சிசெய்கிறான். மனிதன் எப்படி கௌரவமாய் நடந்துகொள்ளவேண்டுமோ, அவ்வாறு நடந்துகொள்கிறான். ஒரு குழந்தை அல்லது ஒரு சிசுவைப்போல, நன்றாய் தாடி வளர்ந்த ஒரு மனிதன் மிருதுவான முகத்தை உடையவனாக ஏன் இருக்கவேண்டும்?

---

# முன்னேற்றமடைய விரும்பினால் உண்மை முஸ்லிமாகுங்கள்!

உயர்வு என்ற மைதானத்தில் ஓடுவதற்கு ஒவ்வொருவருக்கும் ஆசையுண்டு. மனிதராகப் பிறந்தவர் ஒவ்வொருவரும் முன்னேற்றத்தின் ஏணிப்படியில் ஏறி உச்சஸ்தானத்தை அடைய விரும்புவது இயற்கை. ஒவ்வொருவரும் தத்தம் புத்திசாலித்தனத்திற்கும், ஊக்கத்திற்கும், சக்திக்கும் தக்கவாறு முன்னேற்றத்திற்காக பல பாட்டைகளையும் ஏற்படுத்திக் கொள்கின்றனர். சிலர் இதிலுள்ள கஷ்டமான பாதைகளை நினைத்து ஊக்கமிழந்து ஸ்தம்பித்து நின்றுவிடுகின்றனர். சிலர் இந்தப் பாதையில் கொஞ்சதூரம்சென்று அதிலுள்ள கஷ்ட சங்கடங்களைக் கண்டு மலைத்து விடுகிறார்கள். சிலர் இதனுடைய ஏணிப்படியில் ஏறுகின்றனர். ஆனால், மேலே சென்றதும் அதனுடைய தலைவாயல் தாளிடப்பட்டிருப்பதைப் பார்த்து மறுபடியும் கீழில் இறங்கிவிடுகின்றனர். சிலருக்கு முன்னேற்றத்திற்கான வழியே கிடைப்பதில்லை. சிலர் முன்னேற்றத்தின் பாட்டையில் சென்று உலகத்திற்குப் பாடங்கற்பிக்கின்றனர்.

ஆனால், இக்காலத்திலுள்ள பெரும்பாலான ஜனங்கள் முன்னேற்றத்திற்கான பாட்டையை நிர்ணயித்துக் கொள்கின்றனர். ஆனால், அந்தப்பாதை முன்னேற்றத்திற்கான பாதையாக இருப்பதில் வீழ்ச்சிக்கான பாதையாகவே யதார்த்தத்தில் அமைந்துவிடுகிறது. இதனால் அவர்கள் தங்கள்வாணாள் முழுவதையும் வீணாக்கிக் கொள்கின்றனர்.

முஸ்லிம்களாகிய நாம், முன்னேற்றத்தின் பாதையைத் தேடிக் கண்டுபிடித்துச் செல்வது ஒரு பக்கல் இருக்கட்டும். நமது சொந்த நன்மையை உத்தேசித்தேனும், நமது முன்னோர்களினுடைய ஜீவியத்தைப் பற்றிக் கவனஞ்செலுத்தவும், நமது பிதாக்களின் அரும் பெரும் காரியங்களைப் பற்றிச் சிந்திக்கவும் கூட நமக்குப் புத்திசெல்லவில்லை. எக்காலத்திலோ நமது முன்னோர்கள் செய்த அரும் பெருங் காரியங்களைக் கதைகள் என்றமுறையில் கூட நாம் செவியேற்க இஷ்டப்படுகிறோமில்லை. வீணான கட்டுக்கதைகளுக்கேனும் நம்மிடத்தில் ஒருவித மதிப்பு இருக்கிறது. ஆனால் முற்காலத்திலிருந்த நமது முன்னோர்களின்! அரும்பெரும் ஊழியங்களுக்கு நம்மிடத்தில் எவ்விதமதிப்பும் இருப்பதாகக்காணோம்.

நீங்கள் உங்களது மூதாதையரின் ஜீவிய சரித்திரங்களைப் படித்துப்பாருங்கள்! அவர்களுடைய அரும்பெருங் காரியங்களொவ்வொன்றும் சகல விஷயத்திலும் பிரகாசமாக இருப்பதைக் காண்பீர்கள். அவர்கள் தங்களது பின்னைய சந்ததியினருக்காகத் தங்களது வாணாளில் சகல காரியங்களுக்காகவும் படிப்பினைஏற்படுத்தி



விட்டுச் சென்றிருக்கிறார்கள். அவர்கள் இஸ்லாம் என்ற வானத்தில் பிரகாசிக்கும் படியான நக்ஷத்திரங்களாக இருந்தனர். இவர்கள் வந்து இருள் சூழ்ந்திருக்கும் படியான இவ்வுலகத்தைத் தங்களுடையபிரகாசங்களினால் இலங்கும் படிச் செய்தார்கள். இவர்கள் வந்துதான் கொள்ளையையும் நாசத்தையும் வீரதத்துவமுள்ள காரியமாகமாற்றி அமைத்தனர். அநீதியை நீதியாகத் திருப்பினர். வன்னெஞ்சமாக இருப்பதை இரக்கச் சித்தமாகப் புரட்டினர். ஒரு தலைப் பக்ஷமாக நடந்துகொள்வதை நடுநிலைமையாக அமைத்தார்கள். இறுமாப்பைப் பணிவாகவும், பிறர் உதவியை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருப்பதைத் தன்னம்பிக்கையாகவும், வெட்கங்கெட்ட தன்மையை வெட்கமாகவும் மாற்றியதுடன், ஷிர்க்கு என்னும் இணைவைத்தலை ஏகதெய்வக் கொள்கையாகவும் திருப்பினார்கள்.

இஸ்லாத்தின் மடியில் வளர்ந்ததன் பலனாகத்தான் ஹஜ்றத் அபூபக்கர் ஸித்தீக் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் ''ஸித்தீக்கே அக்பர்'' என்ற அந்தஸ்தையடைந்தார்கள். ஹஜ்ரத் உமர் பாரூக் (றலி.) அவர்கள் நீதத்திற்கும், ராஜ்யபாரம் செலுத்துவதற்கும் முன்மாதிரியாக அமைந்தார்கள். ஹஜ்றத் உதுமான்கனீ (றலி.) அவர்கள் ஜாமிஉல் குர்ஆனாயினார்கள். ஹஜ்றத் அலீ (றலி.) அவர்களுக்கு "ஹைதர்" என்ற பட்டங்கிடைத்தது.

இன்றுங்கூட இஷ்டமுள்ளவர்கள் இதனை அனுபவத்தில் தெரிந்துகொள்ளலாம். இன்றைய முஸ்லிம்களில் எவரும் இத்தகைய அந்தஸ்தில் இல்லை என்பதுமெய். ஆனால் இஸ்லாத்தின் போதனைகள் முன்னிரிருந்தது போலவே இன்றும் இருந்து வருகின்றன. ஒருவன் விஷத்தை அருந்தினால் மரித்துவிடுவான் என்பதும், குளிர்ச்சிபொருந்திய வஸ்துக்களை உபயோகிப்பதால் மனிதனின் உள்ளத்தில் குளிர்ச்சி ஏற்படுகிறது என்பதும் நாம் தினசரி இராப்பகலாக அனுபவத்தில் தெரிந்திருக்கிற விஷயமேயாகும். இது, யுக்தியைச் செலுத்த வேண்டிய அபூர்வமான உதாரணமுமன்று.

இதுபோலவே இஸ்லாமும் அதனுடைய போதனைகளுமிருந்துவருகின்றன. ஒருவர் இஸ்லாம் காண்பித்துக் கொடுத்த வழியினைப் பின்பற்றி அதில் ஏவப்பட்டிருக்கும் கட்டளைகளைஅவைகளுக்குரிய சக அம்சங்களும் பொருந்த எடுத்துநடத்தி, விலக்கப்பட்டிருக்கும் காரியங்களைச் செய்யாமல் விலகி இருப்பாராயின் அவர் மனிதத் தன்மையில் பரிபூரணமடைந்த சிறந்த மனிதராகிவிடுவார் என்பதிலையமில்லை. படைத்தவனுக்கும், படைக்கப்பட்டவர்களுக்கும் திருப்தியாகவுள்ள தன்மைகள் அம்மனிதரிடம் உண்டாகிவிடுமென்பது நிச்சயம். தவிரவும் இம்மை மறுமைப்பேறிரண்டினையும் உற்பத்திசெய்யக் கூடிய ஊற்றுக்கண்ணாகி விடுவார் என்பது உறுதி. இது நாம் சுயமே கூறும் தாவாவன்று. இஸ்லாம் மதமே தன்னைப்பற்றி இம்மாதிரிதான் தாவாச்செய்திருக்கிறது. அதிகம் செல்வானேன்? தொழுகை ஒன்றை எடுத்துக்கொள்வோம்: இதனைப்பற்றி திருகுர்ஆன், தொழுகையானது மானக்கேடானவைகளையும் வெறுக்கத்தக்கவைகளையும் விலக்கிவிடும்'' என்று கூறி இருக்கிறது. இஸ்லாத்திலுள்ள கடமைகளில் ஒன்றுக்கு இந்தத்தன்மை இருக்கிறதென்றால், ஏனைய கடமையான காரியங்களிலும் விலக்கல்களிலும் எத்தனை நன்மைகள் மறைந்திருக்கவேண்டும் என்பதை சிந்தித்துப் பாருங்கள்!

இஸ்லாம் மதத்தின் பரக்கத்தினால், நமது முன்னோர்களின் வாணாளில் நமது ஜீவியத்திற்கான சகலவிதமான வழிகாட்டிகளும் அமைந்திருக்கின்றன. ஆகவே, நாம் நமக்குவழிகாட்டுவதற்காக பிறருடைய தலைவாசல்சென்று கதவைத் தட்டவேண்டிய அவசியமோ அவர்களை இச்சகம் பேசவேண்டிய நிர்ப்பந்தமோ இல்லை. இன்று நாம் இவ்வுலகில் முன்னேற்றமடைவதற்காக மற்றவர்களிடமிருந்து பாடங் கற்றுக்கொண்டிருக்கிறோம். ஆனால், நமது வீட்டிற்குள்ளாகவே முன்னேற்றத்திற்கான சகல காரியங்களும் தயாராக இருக்கின்றன என்பது நமக்குத் தெரியவில்லை.

நம்மவரிலுள்ள சில அதிகாரத்திலிருப்பவர்களைப் பின்பற்றுவது முன்னேற்றத்திற்கான வழியென்றும், ஆளும் ஜாதியினரின் அடிச்சுவட்டினைப் பின்பற்றுவது முன்னேற்றத்தில் கொண்டுவந்து விடும் என்றும் தாங்களாகவே நினைத்துக்கொண்டு, அவர்கள் செய்துவரும் ஒவ்வொரு காரியத்தையும் குறிப்பாகப் பார்த்துப் பின்பற்றுகின்றனர். இப்படிப் பின்பற்றுவதைப் பெருமை என்று நினைத்துத் தங்களுக்குள் இறும்பூதெய்கின்றனர். ஆனால், மற்றவர்கள் இவரது செய்கையைப் பார்த்து இவர்களைக் கேவலமாக மதிக்கிறார்கள் என்பதை இவர்கள் உணருவதில்லை.

பிறருடைய செய்கையைக் கூர்ந்து பார்த்துக் குறிப்பாகப் பின்பற்றுமிவர்கள், முற்காலத்திலுள்ள நம்மவர்களையும் பற்றி மேலெழுந்தவாரியாக ஒரு நோட்டமிடுவராயின் இற்றைக்கு 13 நூற்றாண்டுகட்கு முன்னர் முஸ்லிம்களது முன்னேற்றச் சூரியன் உச்சஸ்தானத்திலிருந்ததென்பதையும், அக்காலத்தில்மதீனாவின் அதிபதியாகவுள்ள கம்பளிபோர்த்திய அரசரின்பாதகமலங்களுக்குக்கீழில் கைஸர், கிஸ்ரா சக்கிரவர்த்திகளின் கிரீடங்கள் வந்துவிழுந்தன என்பதையும்தெரிந்துகொள்வர். அக்காலத்திலுள்ள முஸ்லிம்கள் தங்களது முன்னேற்றத்திற்காக தற்போதுள்ள நம்மவர் செய்யும் காரியத்தையா செய்தார்கள்? முஸ்லிம்களுக்கு ஏற்பட்ட அம்மாபெரும் அரசாங்கங்கள் மற்றவரைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றியதனாலேயா கிடைத்தது? அக்காலத்திலும் நாகரீகமடைந்த ஜனங்களும், புதுப்புதுமாதிரியான பாஷன்களும், நவீனங்களும், ஆடல்பாடல்களும், கூத்துகளும், கும்மாளங்களும் குறைவில்லாமற்றானிருந்தன. மனதைக் கவரத்தக்கப் பல விதமான அழகிய சாமான்களும், சபைகளும் இருந்துகொண்டுதானிருந்தன.

ஆனால் அக்காலத்திலுள்ள முஸ்லிம்கள் இவைகளில் எதனையும் ஏறெடுத்துப் பார்க்கவுமில்லை; கடைக்கண்ணால்கூட காணவுமில்லை. அதனை வெறுப்புடனேயே நோக்கினர். ஒரு முறை ஹஜ்றத் உமர் பாரூக் (ரலி.) அவர்கள் கலீபாவாக இருந்து கொண்டிருந்த போழ்து முஸ்லிம்கள் வெற்றிக்கொடி நாட்டி ஷாம் தேசத்தில் பிரவேசித்தனர். அது சமயம் சில அறபிகள் அங்குள்ள ஜனங்களைப்போல்நேர்த்தியான உடைகளையும், கண்ணைக் கவரத்தக்க துணிகளையும் அணிந்ததைக் கண்டு, ஹஜ்றத் உமர் பாரூக் (றலி.) அவர்கள் "அறபியர்களின் சாமான்ய வாழ்க்கையினை நீங்கள் கைவிட்டுவிடலாகாது" என்று அவர்களுக்குத் தாக்கீது செய்தார்கள். இப்பெரியாரைப் பார்க்கினும் நஞ்சமூகத்தின் நாடியைப்பார்த்து சிகிச்சை சொல்லத்தக்க ஆத்ம வைத்தியர் அப்புறம் உண்டாகவில்லை என்று இற்றைக்கும் மேனாட்டினர் போற்றுகின்றனர்.

முன்னேற்றம், முன்னேற்றம் என்ற கீதத்தை நாம் பாடுவதில் கொஞ்சமும் குறைவில்லை. ஆனால், நம்மவரில் எவரேனும் ஏதேனும் ஒரு காரியத்தில் கொஞ்சமேனும் முன்னேற்றமடைந்தவுடன் 'அகம்பாவம், பெருமை என்ற பித்து அவரது மூளைக்கேறிவிடுகிறது. தங்களைப் பார்க்கினும் குறைந்தவர்களைக் கண்ணால் பார்ப்பதுகூட அவர்களுக்குக் கேவலமாகத் தோன்றுகிறது. இவ்விதமான நினைப்பினால் இவ்வுலகம் தோன்றிய காலம் தொடுத்து இன்றுவரை எவரேனும்முன்னேற்றமடைந்திருக்கிறார்களா? ஆனால், எவ்வளவுக்குப் பணிய முடியுமோ அந்த அளவுக்குப் பணியவேண்டும் என்பது இஸ்லாத்தின் போதனையாக இருக்கிறது. சர்க்கரையையும் ஜலத்தையும் ஒன்றுசேர்த்து விடுவதால் மட்டிலும் ஷர்பத் உண்டாகிவிடமாட்டாது. அவ்விரண்டும் அழிந்து வேறு ஒருவஸ்துவாக அது உண்டாகிவிட வேண்டும். ஜலம் ஜலமாக இருக்கக் கூடாது; சர்க்கரை சர்க்கரையாக இருக்கக்கூடாது. இவ்வண்ணம் மாறினால் தான் ஷர்பத் உண்டாகமுடியும். இந்த நிலைமையே மனிதனுக்கு மிருக்கிறது. மனிதன் எந்த அளவிற்குத் தாழ்மையாகின்றானோ அந்த அளவிற்கு உயருவான்.

ஹஜ்றத் காலிதுப்னு வலீத் (றலி.) அவர்களுக்கு நுபுவ்வத்தின் தர்பாரிலிருந்து அதாவது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களிடமிருந்து "ஸைபுல்லாஹ்" அதாவது அல்லாஹு தஆலாவின் வாள் என்ற பட்டங்கொடுக்கப்பட்டிருந்தது. நபிகள்நாயகம் (ஸல்.) அவர்கள் காலத்திலும் அதற்குப் பின்னரும் அவர்கள் தளகர்த்தராக இருந்தார்கள். போர்வீரர்களனைவரும் அவர்களது தலைமையில் யுத்தத்திற்குச் செல்வதைத் தங்களுக்குக் கிடைத்த அரியதொரு பாக்கியமெனக் கருதுவர். அவர்களது தலைமையின் கீழ் பட்டாளம் படையெடுத்து வருகிறதென்றால் எதிரிகள் ஓட்டம்பிடிப்பதைத் தவிர வேறு ஒன்றும் நிகழ்வதில்லை. ஹஜ்றத் உமர் பாறூக் (றலி) அவர்களது காலத்தில் இருக்ஷாம் யுத்தங்களில் அநேகம் அரும் பெரும் வெற்றிகளைக் கண்டார்கள். இவ்வளவு திறமையும் சக்தியும் வல்லமையும் கௌரவமும் கண்ணியமும் மதிப்பும் வாய்ந்த மாபெரும் தளகர்த்தர் ஷாமம் தேசத்தின் யுத்தகளத்தில் போர்வீரர்களின் மத்தியில் இருந்துவரும் சமயத்தில் ஹஜ்றத் உமர் பாரூக் (றலி) அவர்களது தூதுவர் வந்து போர்வீரர்கள் புடைசூழ்ந்திருக்கும்போது அவரைத்தளகர்த்தர் பதவியைவிட்டு நீக்கிச் சாமான்யராக ஆக்கிவிட்டு ஹஜ்றத் அபூ உபைதத்துப்னுஜர்றாஹ் (றலி.) அவர்களைத்தளகர்த்தர் பதவிக்கு உயர்த்தினார்.



இப்படிப்பட்டசமயத்திலும்கூட ஹஜ்றத் காலித்துப்னு வலீத் ஸைபுல்லாஹ் (றலி) அவர்கள் தங்களது போராட்டம்அல்லாஹு தஆலாவின் சத்தியசன்மார்க்கத்திற்காகத்தான் என்று கூறி சாதாரணச்சிப்பாய் என்ற முறையில் ஹஜ்றத் அபூ உபைதா (றலி) அவர்களது தலைமையின் கீழில் வழக்கம்போல் யுத்தம்செய்து கொண்டிருந்தார்கள். தங்களது முயற்சியிலும் போராட்டத்திலும் எத்தகைய மாறுதலையும் செய்யவில்லை. நமது முன்னோர்களான இப்பெரியார்கள் தங்களில் இம்மாதிரியான தியாக உணர்ச்சியையும், சுயநலமின்மையையும் உண்டு பண்ணி இருந்தனர். ஆதலால்தான் அவர்கள் அம் மாபெரும் மகிமைகளை அடைந்தனர்.

ஒரு முஸ்லிம் முன்னேற்றமடைய வேண்டுமாயின், அவர் பரிபூரணமான மூமினாக ஆகிவிடுவதைத்தவிர வேறொரு வழியுமில்லை. அவர் இஸ்லாம் காண்பித்துள்ள வழியினைப் பின்பற்றவேண்டும். றஸூலே அக்ரம் (ஸல்) அவர்களையும், அவர்களைப் பின்பற்றிய பெரியார்களையும் பற்றிய ஜீவிய சரித்திரங்களைத் தங்களது வழிவிளக்காகக் கொண்டு வழிநடப்பாராயின் அவரது சகலகஷ்டங்களும் சஞ்சலங்களும் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கிவிடும்.

## சத்தியப் பிரசாரம்

நல்லதை ஏவிக் கெடுதிகளை யகற்றல் சன்மார்க்க அஸ்திவாரமும், இஸ்லாமின் லக்ஷியமுமாகும். ஆகவே முஸ்லிம்களுக்கு கீர்த்தியை அளிப்பது, அவர்களை மானிடர்களில் கீர்த்திவாய்ந்தவர்களாக மிளிரச் செய்வது நல்லதை ஏவிக் கெடுதிகளை யகற்றும் உத்தம கைங்கரியமேயாகும். இதுவே மத சம்பந்தமான ஒவ்வொரு காரியத்தின் அஸ்த்திவாரமுமாகும். "நல்லதை ஏவி கெடுதிகளை யகற்றுவதோடு நீங்கள் அல்லாஹ்வின் மீதும் ஈமான் கொண்டிருப்பதால் எல்லா மனிதர்களிலும் நீங்களே உத்தமர்களாகும்" என்று அல்லாஹு தஆலா அருள்புரிந்திருக்கிறான். மேலும் "முஸ்லிம்களுக்கு அரசாங்கம், கிலாபத்து ஆகியவைகளை யளித்து அவர்களை உலகில் நிலைநிற்கும்படி செய்தால் அம்முஸ்லிம்கள் தேசங்களைக் கைப்பற்றவோ, இன்ப சுகங்களை அனுபவிக்கவோ இஷ்டப்படாமல் அல்லாஹு தஆலாவை வணங்குவதோடு தங்கள் பொருளை அவன் வழிப்பாட்டில் செலவு செய்வார்கள். அன்றியும் (முஸ்லிம்கள்) நல்லதை ஏவிக்கெடுதிகளை அகற்றுகின்றவர்களாகவு மிருப்பார்கள்" என்றும் அல்லாஹ் தஆலா திருவுளமா யிருக்கிறான்.

திருமறையின் திவ்விய இவ்விரு வசனங்களையும் நோக்குமிடத்து, (1) தேக சம்பந்தமான வணக்கம், (2) பொருள் சம்பந்தமான வணக்கம், (3) நல்லதை ஏவுவது, (4) கெடுதிகளை யகற்றுவது ஆகிய இந்நான்கு காரியங்களைச் செய்வதற்காகவே முஸ்லிம்களுக்கு உலகில் கீர்த்தியும் கெவர்திகளும் அளிக்கப்பட்டனவென்று நிச்சயமாய் விளங்கக்கிடக்கின்றது. ஆகவே, ஒவ்வொரு முஸ்லிமுக்கும், தொழுகை, ஜக்காத்து ஆகியதேக சம்பந்தமான வணக்கமும், பொருள் சம்பந்தமான வணக்கமும் விதிக்கப்பட்டிருப்பதுபோல, நல்லதை ஏவி கெடுதியை அகற்றுவதும் கடமையாக்கப்பட்டிருக்கிறது. எனவே உலகில் சத்தியத்தை நிலைநிறுத்தி வழிகேட்டை யகற்றுவதாகிய ஊழியத்தை அல்லாஹு தஆலா முஸ்லிம்களுக்கு சன்மானமாக்கியிருக்கிறானாதலின் முஸ்லிம்கள் எத்தகைய கஷ்டத்திற்காளாயினும் சத்தியம், உண்மை முதலியவைகள் க்ஷீணித்துப்போகா வண்ணம் பாதுகாக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

இவ்வூழியம் குறிப்பாக எந்த ஒரு வகுப்புக்கும் கடமையாக்கப்படவில்லை; இது சகலமுஸ்லிம்களுக்கும் பொதுவாகவே உள்ள கடமையாகும். நல்லதை ஏவி செடுதிகளை யகற்றுவதாகிய ஊழியம் முற்காலத்தில் (இஸ்லாமுக்கு முன்) உலமாக்களுடையவும், தலைவர்களுடையவும் காரியமாக விருந்ததால், அவ்வுலமாக்களும் தலைவர்களும் நன்மையளவில் ஸ்திரப்பட்டிருந்தார்கள். ஆகவே, முற்காலத்தில் ஜனங்கள் கெடுதியில் சிக்குண்டு அழிந்துபோனதற்குக் காரணம், நல்லதை ஏவி கெடுதிகளை யகற்றும்

பொறுப்பை உலமாக்களிடம்மட்டும் விட்டிருந்ததினுலேதான் என கூறுவது மிகையாகாது. இப்பெரும் வியாதிக்குப் பரிகாரமாகவே இஸ்லாம்நல்லதை ஏவி கெடுதியை யகற்றும் பொறுப்பை ஒவ்வொரு முஸ்லிம்களுக்கும் கடமையாக்கிவிட்டது.

ஆதலின் ஒவ்வொருமுஸ்லிமும் அல்லாஹுதஆலாவுக்கும் அவனது ரசூலுக்கும் வழிப் படுவதற்காகச் செய்யும் வாக்குறுதியிலேயே, அவர்கள் தங்கள் வாணுட்களில் சத்தியத்தை நிலை நிறுத்தி அசத்தியத்தை யொழிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டு, நன்மைக்குதவி புரிந்து கெடுதியை அகற்றுவதற்காகத் தங்கள் சக்திகளை அர்ப்பனஞ் செய்வதாகவும் வாக்குறுதிசெய்து விட்டதாய் தீர்மானிக்கப்படும்.

"யாராகிலும் கெடுதியைக் கண்டானுகில் அதை கையினுல் விலக்கவேண்டும். இதற்குச் சக்தி பெறவில்லையானுல் நாவினுல் விலக்க வேண்டும். இச்சக்திகூட இல்லாதிருக்குமாயின் (அக்கெடுதியை) ஹிருதயத்தால் வெறுக்க வேண்டும். ஆயினும் இந்நிலைமை விசேஷபலக் குறைவையுடையதாகும், என்று நாயகம்(ஸல்) அவர்கள் அருளியிருக்கிறுர்கள்.

இஸ்லாத்தின் ஆரம்பகாலத்து நடவடிக்கைகள் மட்டுமே உண்மையில் இஸ்லாமிய அறிவை அடிப்படையாகக் கொண்டிருந்தது, அந்நற்காலம் வெகு சீக்கிரத்தில் முடிவடைந்து விட்டதற்காக வருந்தவேண்டியதாகவிருக்கிறது. இவ்விஸ்லாமிய கடமையின் தத்துவமே முற்காலத்தில் இஸ்லாமிய நாட்டை நல்ல அரசாங்கத்தின் மூலமாய் சுவர்க்க உலகமாக்கியிருந்தது. ஒவ்வொரு முஸ்லிமும் உலகில் தான் அல்லாஹ்வின் பிரதிநிதியாக இருப்பதாய் உறுதிகொண்டிருந்தார்களாதலின் அவர்கள் நல்லதை ஏவிக் கெடுதிகளை யகற்றும் கடமையை எச்சந்தர்ப்பத்திலும் கைவிட்டார்களில்லை; அவர்கள் அல்லாஹ்வின் இஷ்டத்திற்கு தங்களின் சக்திகளை உட்படுத்தி யிருந்தார்கள்.

"ஷைத்தானுக்குட்பட்டு விபசாரம் புரிந்த ஒருமாது (அதை ஒருவரும் அறியாதிருந்துங்கூட) நாயகம் (ஸல்.) அவர்களிடஞ் சென்று தான் விபசாரம் புரிந்துவிட்டதாய்க் கூறி தன்னைக் கல்லாலெரிந்து கொல்லும்படி கேட்டுக்கொண்டதால் அவ்விதமே கொல்லப்பட்டாள்" என்று அக்காலத்திய சரித்திரத்தில் வாசிக்கிறேம்.

இதைப்போல் அக்காலத்தில் எண்ணிறந்த மக்கள் எல்லாவற்றையுமிழந்து உண்மையை நிலைநிறுத்துவதற்காக அல்லாஹ் தஆலாவின் பாதையில் சொல்லொணு கஷ்ட நிஷ்டூரங்களை அனுபவித்திருக்கின்றனர். சத்தியத்துக்கு விரோதமாக நடந்த தன் குமாரனை தகப்பன் தன் கரங்களாலேயே சிக்ஷைசெய்திருப்பதாயும், உண்மைக்குமாருக நடந்த தன் தந்தையை சிட்சிக்கும்பொருட்டு அவருடைய புத்திரர்கள் வாளாயுதம் தாங்கியதாகவும் அறிகிறேம்.

"வழிகேடர்களை வெகு கொடூரமாய்த்தாக்குவார்கள்; ஆனுல் தமக்குள் (ஒரு மூமினுக்கு மற்றொரு மூமின்) மிக்க தயாளமுள்ளவர்களாக விருப்பார்கள்" என்று மேற்கூறப்பட்டவர்களைப் புகழ்ந்து அல்லாஹ் தஆலா கூறியிருக்கிறுன். இவர்கள் மற்றவர்களை அல்லாஹ் தஆலாவுக்காகவே நேசிப்பவர்களாயும் அவனுக்காகவே விரோதிப்பவர்களாயுமிருப்பார்கள்; சத்தியத்திற்காகவே ஜனங்களோடு ஒன்றுபடுவார்கள்; உண்மைக்காகவே அவர்களை விட்டுப் பிரிந்துபோவார்கள். எனவே அல்லாஹ்தஆலாவின்சம்பந்தத்திற்கு தன்னை உட்படுத்திக் கொள்வார்களேயன்றி அவர்களுக்கென பிரத்தியேகமாய் எவ்வித அபிப்பிராயமும் இஷ்டமும் கிடையா. அவர்கள் அல்லாஹ்வுக்காகச் செல்லும் வழியில் எதற்கும் அஞ்சார்கள். அவர்களை பயமுறுத்துவதற்கான சக்திகள் உலகில் கிடையா. நல்லதை ஏவி கெடுதியை யகற்றுவதாகியபொறுப்பை இஸ்லாம், முஸ்லிம்கள் மீது சுமத்திவைத்திருப்பதால் முஸ்லிம்களுக்கு பெரும் சயேக்ஷையும் தைரியமும் தானுகவே ஏற்படுகின்றன. முற்காலத்தில் நல்லதை ஏவி கெடுதிகளை யகற்றுவதில் முஸ்லிம்களுக்கிருந்துவந்த தைரியமும் அஞ்சாமையும்சாமான்யமானதன்று.

இஸ்லாமிய பூமியில் வசித்த ஒவ்வொரு பாலகனும், மதீனுவீதியில் நடக்கும் விருத்தாபியமாதருங்கூட, உண்மைக்குழைக்கும் சத்தியத்தைப் பெற்றிருந்தனர். உண்மையை நிலைநாட்டுவதற்காக அப்பாலகனுக்கும் விருத்தாப்பிய மாதருக்கும் இருந்த உணர்ச்சியை இன்று மார்க்கபக்தி நிறைந்த எந்த மனிதரிடத்திலுங்கூட காணமுடியவில்லை. நல்லதை ஏவி கெடுதிகளை யகற்றுவது என்னும் ஆத்மா முஸ்லிம்களுக்களித்த ஜீவனை நாம் எங்ஙனம் புகழாதிருக்கமுடியும். இச்சேவையை சிரமேற்



கொண்டு தொண்டுபுரிய முன்வந்த முஸ்லிம்களின் நாவையடக்க வாளாயுதங்களுக்கும் சக்தியில்லாதபொழுது அவர்களை பயமுறுத்த அரசாங்கங்களுக்கு தைரியமுண்டாகுமோ?

இச்சேவையின் ஜீவன் ஓங்கிவளருங்காலத்தில் அதன் சக்தியை ஒடுக்கி நாசமாக்கிய பாதகர்களுள் முதன்மையானவர்கள் பனூ உமையாக்களேயாகும். இவர்களின் செல்வாக்கும் ஏதேச்சாதிகாரமுமேநல்லதை ஏவி கெடுதியை யகற்றும் உணர்ச்சியைக் கெடுத்துவிட்டது. ஜனநாயக தத்துவத்தை யழித்து ஏதேச்சாதிகார அரசாங்கத்துக்கு அடிகோலியவர்களும் இவர்களே.

நல்லதை ஏவி கெடுதியை அகற்றும் இஸ்லாமிய ஜீவன் ஓங்கிவளருங் காலத்தில் அதன் சக்தியை ஒடுக்கி நாசமாக்கிய பாதகர்களுள் முதன்மையானவர்கள் பனூஉமைய்யாக்களே யாவர். இவர்களின் செல்வாக்கு ஏதேச்சாதிகாரமுமே நல்லதை ஏவி கெடுதியை அகற்றும் உணர்ச்சியைக் கொன்றுவிட்டது. எனவே ஜன நாயக தத்துவத்தை யழித்து ஏதேச்சாதிகார அரசாங்கத்துக்கு அடிகோலியவர்களும் இவர்களே.

பனூ உமைய்யாக்களுக்குப் பிறகு அவர்களின் வாரிசுகளாக பனூ அப்பாஸிய்யாக்களாகினர். இவ்வரசாங்கத்தின் செல்வாக்கும் அதிகாரமுங்கூட நாளுக்குநாள் நல்லதை ஏவிக் கெடுதிகளை யகற்றும் தன்மையை யகற்றிக் கொண்டே வந்தன. ஆயினும் இஸ்லாம் முஸ்லிம்களுக் களித்த ஜீவனை யொழிப்பதற்கு வெகுகாலம் வேண்டியதாக விருந்தது. அந்நாளிலும் உண்மைக்காக உயிர் பொருள் முதலிய எல்லாவற்றையும் பலர் தியாகஞ் செய்திருக்கின்றனர். இவர்கள் அரசாங்கத்திற்குப் பயந்து அசத்தியத்தை ஏற்றுக்கொள்ளாது தைரியமாகவிருந்தனர். அப்பாஸிய்யாக்களுக்குப் பிறகு தாத்தாரியாக்களின் அநியாயம் இஸ்லாமிய உலகத்தையே அழித்துவிட்டது; தாத்தாரி என்னும் காட்டுமிராண்டித்தனம் படைத்தவர்கள் அப்பாஸிய்யா அரசாங்கத்தைக் கைப்பற்றிக்கொண்டனர். ஆகவே, அன்று முதல் அறபி அரசாங்கம் ஒழிந்ததோடு அவ்வரசாங்கத்தின் பொறுப்பால் நடந்துவந்த இஸ்லாமிய காரியங்களும் ஒழிந்துபோயின. பிறகு இஸ்லாமிய உலகத்தில் கலகமும், யுத்தமுமே விருத்தியடைந்தன.

அப்பாஸிய்யாவின் சந்ததியில் உதித்த மஃமூனுற்றஷீத், முத்தவக்கில் போன்ற கீர்த்திவாய்ந்த அரசர்களின் ஆக்ஷியும் சத்திய ப்ரசாரர்களை பயமுறுத்த முடியவில்லை. சத்தியப் பிரசாரர்கள் உயிரை உள்ளங்கையில் ஏந்தியவர்களாய் உண்மையை நிலைநிறுத்துவதற்காக பகிரங்கமாய்ப் பிரசாரம் செய்துவந்தார்கள். அப்பாஸிய்யா அரசாங்கத்தின் தலைநகராகிய பக்தாதில் அல்லாஹ் தஆலாவை பயந்த உண்மையான உலமாக்கள் மிகவும் பரிதாபகரமான அநியாயங்களுக் கிரையாகி வந்தார்கள்.

பக்தாத் ஜாமிஃ மஸ்ஜிதில், ஜஹமிய்யா, முஅதஜிலா ஆகிய வகுப்புச்சேராத எவரும் பிரசங்கம் செய்யமுடியாது. குர்ஆன் ஷரீப் படைக்கப்படாததென்று எவரேனும் கூறினுல் அன்னவருக்குச் சிட்சை, தூக்குதண்டனையாகவிருந்தது. இத்தகைய நெருக்கடியான சந்தர்ப்பத்தில் குர்ஆன் ஷரீப் படைக்கப்பட்டதென்னும் கொள்கைத் தவறென்று பக்தாதின் ஜாமில் மஸ்ஜிதில் பகிரங்கமாய்ப் பிரசாரஞ் செய்து, கைதியாகி தர்பாருக்குக் கொண்டு போகப்பட்டு அங்கு மஃமூனுற்றஷீதுடைய முன்னிலையில் நல்லதை ஏவிக்கெடுதியையகற்றுவது என்னும் கடமையைச் செய்து முடிப்பதற்காக ஷேக் அப்துல் அஜீஜ் பின் எஹ்யா மக்கமாநகரிலிருந்து கால்நடையாக பக்தாதுக்கு விஜயஞ் செய்தார்கள்.

பிறகு ஷேக் அவர்கள் ஜும்ஆவன்று நல்ஸாபா வென்னும் ஜாமிஃமஸ்ஜிதில் ஜும்ஆத் தொழுகைக்குப்பின் மிம்பர்மீது ஏறி குர்ஆன் ஷரீப் படைக்கப் படாதது என்று உரத்துக் கூறினுர்கள். ஷேக் அவர்களின் களங்கமற்ற இவ்வார்த்தையானது மஸ்ஜிதினுள்ளிருந்த ஜனங்களுக்குப் பெருந்திகிலை யுண்டுபண்ணிற்று. ஷேக் அவர்களைப் பைத்தியக்காரனென்றும், தற்கொலை புரிந்து கொள்ளத் துணிந்துவிட்டவரென்றும் ஜனங்கள் கூறினுர்கள். ஷேக் அவர்கள் மஸ்ஜிதில் பிரசாரஞ் செய்த விஷயம் தெரிந்தவுடன் போலீஸ் அதிகாரி ஸ்தலத்திற்கு வந்து ஷேக் அவர்களைக் கைதி செய்தார். கடைசியாய் மஃமூனுற்றஷீதினுடைய தர்பாரில் சென்று குர்ஆன் ஷரீப் படைக்கப்பட்டதென்னும் கொள்கையிலுள்ள கெடுதிகள் யாவற்றையும் அஞ்சா நெஞ்சம் படைத்தவராய் எடுத்துக் கூறினுர்கள் என்பது உலகப்பிரசித்தம். மஃமூனுற்றஷீத் போன்ற

கலீபாக்களை சந்ததிகளாகக் கொண்டிருந்த அப்பாஸிய்யா வென்னும் வகுப்பு ஆக்ஷியையிழந்த பின் அரசாங்கத்தின் பொருப்பை ஏற்றுக் கொண்ட தாத்தாரிகளின் அக்கிரமச் செய்கைகள் நாறுபக்கங்களிலும் பரவிவிட்டன. பக்தாதின் ஆட்சி ஒழிந்த அன்றே அறபிகளின் சக்தி குன்றிப்போயிற்று. இஸ்லாமிய உலகம் முழுவதிலும் துருக்கியருக்கு செல்வாக்கேற்பட்டுவிட்டது. துருக்கியர் இஸ்லாம் மதத்தைப்புதிதாய்த் தழுவிக் கொண்டவர்களென்பதுமட்டுமின்றி அறபிபாஷையை அறியாதவர்களாயும் இஸ்லாம்மத விளக்கமற்றவர்களாயுமிருந்தார்கள்.

ஆகவே, கல்வி சம்மந்தமாயும் மத சம்மந்தமாயும் துருக்கியர்கள் உலமாக்களின் சகாயத்தைப் பெறவேண்டியதாக விருந்தது. எனவே கல்வி, மதம் ஆகிய அறிவின் மூலமாக உலகத்தின் கீர்த்தி, உத்தியோகம், பொருள் முதலியவைகளைப் பெற பலர் முற்பட்டுவிட்டனர். ஆகவே, நல்லதை ஏவிக் கெடுதிகளை விலக்குவது சம்மந்தமாய் இருந்துவந்த அற்ப உயிரும் பாழாகிவிட்டது. அன்றுமுதல்உண்மையைநிலை நிறுத்தி கெடுதியைப் போக்குவதற்கன்றி, அரசாங்க உயர்பதவியைப் பெறக்கருதி கல்வி கற்க ஆரம்பித்து விட்டனர்.

உண்மை சத்தியம் நியாயம் ஆகியவைகள் அசத்தியம் அநியாயம் ஆகியவைகளின் தொந்தரைக் குட்பட்டு உதவியின்றி நசித்துப் போவதைக் கண்டு ஆலிம்கள் மௌனவிரதம் பூண்டனர். ஆனதுபற்றியே இஸ்லாமிய சரித்திரத்தின் கடைசி நூற்றுண்டுகளில் நல்லதை ஏவிக்கெடுதியை யகற்றுவது சம்மந்தமான வரலாறு பிரகாசமின்றி இருள் சூழ்ந்ததாகவே இருக்கின்றது. இவ்வாறு கடைசி காலத்தில் நாளுக்குநாள் இஸ்லாமிய ஒளி குறையவும், அவ்வொளி இருந்தவிடத்தை அசத்தியமென்னும் இருள் கைகொள்ளவும் தலைப்பட்டது. அன்றியும் முஸ்லிம்கள் பொதுவாக இஸ்லாமிய கல்வியைக் கற்கவேண்டிய அவசியத்தை அலக்ஷியஞ் செய்யத் தொடங்கிவிட்டார்கள். இந்நிலைமையில் முஸ்லிம்கள் முன்னேற்றமடைவதற்குப் பதிலாக பிற்போக்கை அடைவது சகஜமல்லவா? நல்லதை ஏவி கெடுதியை யகற்றுவது, நேரான வழியை அடைவது ஆகியவைகளின் ஞானக்களஞ்சியமான குர்ஆன் ஷரீபையும் ஹதீதுகளையும் கற்றுணர்வதற்குப் போதிய காலத்தை செலவிட இஷ்டப்படாது முத்தஅக்கிரீன்கள் என்னும் பின்னோர் இயற்றிய கிரந்தம் இவர்களின் வியாக்கியானம், விரிவுரை ஆகியவைகளைப் பயின்று தப்ஸிர் ஹதீது இவைகளுக்குள்ள சம்மந்தத்தைக் கண்டு பிடிக்கும் ஆற்றலையடைந்து விடுவது போதுமானதெனக் கருதிவிட்டனர்.

இஸ்லாத்தின் பரிசுத்தமான ஒளி வீசிய முற்காலத்துக்குப்பின் பனூ உமைய்யா, பனூ அப்பாஸிய்யா ஆகிய வகுப்பாரின் எண்ணூறு வருஷத்திய ஆட்சிகாலத்தில் இஸ்லாமிய உலகத்தில், எலும்பில் உற்பத்தியான வியாதி துருக்கியின் ஆட்சி காலத்தில் தேகமெல்லாம் பரவிவிட்டதெனக் கூறுவது மிகையாகாது. ஆயினும் அல்லாஹு தஆலாவின் பூமியானது நியாயம் சத்தியம் ஆகிவைகளின் பிரசாரத்தை முற்றும் இழந்துவிடவில்லை. வழிகேடு, அசத்தியம், துர்க்கிருத்தியம் முதலியவைகளடர்ந்த எப்படிப்பட்ட இருள் சூழ்ந்த காலத்திலும் சதா ஸாலிஹீன் என்னும் வகுப்பார் சத்தியப் பிரசாரம் புரிந்து வந்திருக்கின்றனர். அப்பிரசாரம் தொடர்ச்சியாய் நடந்துவர வேண்டுமென்பதே அல்லாஹு தஆலா இயற்றிய சட்டமாக விருப்பதால், இச்சட்டத்திற்கிணங்க உலகில் சத்தியப் பிரசாரம் நடந்தே வந்திருக்கிறது. எத்தகையை கொடிய காலத்திலும் இடைவிடாது சத்தியப் பிரசாரம் செய்து வரும் இவ்வுத்தமர்களின் ஹிருதயத்தை அல்லாஹு தஆலா பாதுகாப்பவனாக விருப்பதால் இவர்களின் ஹிருதயத்துள் ஷைத்தான் பிரவேசிக்க முடியாது.

ஆகவே முற்காலத்தவர் உத்தமர்களாயும் கீர்த்திவாய்ந்தவர்களாயும் திகழ்ந்ததற்குக் காரணம், அவர்களிடம் மிளிர்ந்துகொண்டிருந்த "நல்லதை ஏவி கெடுதிகளை யகற்றும்" உத்தம கைங்கரியங்களேயாகும். பின்னோர்களாகிய நாம் இவ்வுத்தமச் சேவையைக் கைவிட்டதன் பயனாக மிகமிக பிற்போக் கடைந்தவர்களாயும், உண்மையான சன்மார்க்க சீலர்களல்லாதவர்களாயுமிருக்கிறோம். இது இஸ்லாத்தின் உண்மை போதனைக்கு நேர் விரோதமாகும். ஆகவே நம் முஸ்லிம் நேயர்கள் அவ்வுத்தம கைங்கரியத்தை கடைபிடித்து நடப்பதற்கு அரும் முயற்சி எடுத்துக் கொள்வார்களென்று மிக மிக எதிர்பார்க்கிறோம்.

---

